# ஃப்ளோரைட் குறைந்தபட்சம் 50 வயது மட்டும் பற்களில் சொத்தை விழாமல் தடுக்கிறது

1961ல் ஈக்ஸலும் எல்லோவும் நடத்திய ஆராய்ச்சி. ஆதாரம்: 'ஸயன்டிபிக் ஆர்ட்டிகில்ஸ்' பக்கம் 805; இங்கிலாந்து ராயல் காலேஜ் ஆப் ஸர்ஜன்ஸ் ஆண்டு மலர், நவம்பர் 1969, தொகுதி 45/எண் 5

## எனவேதான் பினகா தங்களின் பற்பசையில் ஃப்ளோரைட் சேர்த்துள்ளனர்

ஏனெனில் பினகா ஃப்ளோரைடில் உள்ள ஸோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (SMFP) சொத்தை விழாமல் பற்களைப் பாதுகாப்பதுடன், பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பாதகம் செய்யும் அமிலங்கள் வாயில் ஊறுவதைத் தடுக்கிறது. பற்களின் ஆரம்ப சிதைவைத் தவிர்க்கிறது. பினகா ஃப்ளோரைட் உபயோகம் செய்ய முக்கிய காரணங்கள் இவை. (நோய் வருமுன் காப்பளித்திடும் பற்பசை இவை)




CIBA Cosmetics



பற்சிதைவு, வலிதரும் சொத்தை
இவைகளுக்கெதிரான மும்முனைப்
பாதுகாப்பு-பினகா ஃப்ளோரைட்

# தன் மனம்போல்
# இன்புறவே, தன் வழியில் தென்புறவே
# க்ளாக்ஸோஸ்-D®


தேநீரில் அல்லது காப்பியிலே க்ளாக்ஸோஸ்-D


குடிநீரிலே க்ளாக்ஸோஸ்-D


எலுமிச்சஞ் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D


பழச் சாற்றிலே க்ளாக்ஸோஸ்-D


நேரடியாக க்ளாக்ஸோஸ்-D


பாலிலே க்ளாக்ஸோஸ்-D

**உங்கள் சுதந்திரம். க்ளாக்ஸோஸ்-D
எப்போது, எப்படிச் சாப்பிடுவது
என்பதற்குக் கட்டுதிட்டங்கள் இல்லை.
களைத்த மனசுக்கு எப்படிப் படுகிறதோ
அப்படியே
எப்படிச் சாப்பிட்டாலும் சரி, ஒன்று நிச்சயம்:
இரண்டொரு ஸ்பூன்களிலே உடனடி
சக்திபெற
இதனிலும் இனிய வழி
இன்னொன்று இல்லை.
அசதி இனி வந்தால், வசதியாக
விரட்டுங்கள்.**



## ஊக்க சக்தி உடனடி: அதற்கே க்ளாக்ஸோஸ்-D®

dCP/GL/26 tam






மலிவு விலை
நகர்ப்புற வீடு




உறுதியானது, நிலையானது ஆனாலும் மலிவானது

# சங்கர் சிமெண்ட்




பாறை போன்று உறுதி நிலைத்திருக்கக் கூடியது

ISI மார்க்குடன் உத்தரவாதம் உள்ளது




IC-1444TM

இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட், தன் பில்டிங், சென்னை-2

25 ஆண்டுகளுக்கு மேல் நிலைத்து—இன்னும் வளர்ந்து கொண்டே போகிறது!

இலவச தொழில் நுட்ப ஆலோசனைக்கு: சிமெண்ட் சர்வீஸ் பீரோ, 'குரோசல்', சென்னை -18

# கல்கி பொருளடக்கம்

விரோதிகிருது, மாசி 8. - பிப்ரவரி 20, 1972





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 23-00 | ரூ. 11-50 |


NEW! SUPER
Surf
FOR SUPER WHITENESS
ஒரே ஒரு சலவையில்
ஸூப்பர் ஸர்ஃப், வேறெந்த
சலவைப் பவுடரையும் விட
அதிக வெண்மை தருகிறது!
அமோகமான சலவைத் திறன் படைத்தது
ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்குகளையும்
அகற்றிவிடும். காண்போர் பொறுமைப்படும்
கற்பனைகடந்த வெண்மை. கேட்பானேன்,
இந்தியாவின் தலைசிறந்த ரகம்:
ஸூப்பர் ஸர்ஃப்!
ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்,
(வெண்மையூட்டும் சாதனம் எதுவும் சேர்க்கத் தேவையில்லை)
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

கல்கி

மலர் 31

இதழ் 30



தமிழ்த்திரு நாடுதன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
--- பாரதியார்

# இடம் கொடுத்தால் கெட்டுப் போவீர்கள்!

மது பானம் ஆரம்பத்தில் விளையாட்டாக இருக்கும். அந்தப் பிசாசுக்கு இடம் கொடுத்தால் நிச்சயம் கெட்டுப் போவீர்கள். இவ்வளவு காலம் அந்தப் பிசாசை உள்ளே நுழைய விடாமல் வைத்திருந்தோம். இப்போது எங்கே பார்த்தாலும் கள்ளுக்கடை, "ஒயின்" கடை. விளக்குகளும் அழகான பலகைகளும் அழகான பெயர்களும் வைத்து 'வா! வா!' என்று அழைக்கும் முறையில் இந்த வேதாளம் நாட்டைக் கெடுக்கும் வழியில் தமிழ் நாட்டுச் சர்க்காரால் நிலைநாட்டப் பட்டிருக்கிறது. ஆனபோதிலும் நம். நன்மையை நாம் காத்துக் கொள்ளும் சுதந்திரத்தை யாரும் எடுத்து விடவில்லை.

அந்தப் பிசாசுக் கடைகளை நோக்காதீர்கள். நாட்டைக் கெடுக்கும் பிசாசு! நல்லதுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். என் வார்த்தையைத் தட்டாதீர்கள்.

வலையில் சிக்கினபின் மீள்வது முடியாத காரியம். மூளையைக் குழப்பிவிடும் பிசாசு. மூளையின் தெளிவு போனபின் மானம், பொறுப்பு, சம்பாதித்த பணம், பக்தி எல்லாம் திக்கற்ற நிலை அடைந்துவிடும். தகப்பனை இழந்த குழந்தைகளின் திக்கற்ற நிலை அடைந்துவிடும். பல்லாண்டுகளாகச் சொல்லிவந்த விஷயம். புதியதில்லை. போன பிசாசு திரும்பி வந்துவிட்டது. உள்நாட்டுக் கள்ளும் சாராயமும் போதாதென்று "ஒயின்"கள், "விஸ்கி", "பிராந்தி" முதலிய விஷங்கள் எல்லாம் ஒரு கடைத் தெருவில் படாடோபப் பலகைகளுடன் அறியாத வாலிபர்களைக் கெடுக்கக் காத்திருக்கின்றன. கிட்டப் போகாதீர்கள். தூர விலகி நிற்பதே காப்பாற்றிக்கொள்ளும் வழி.

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# ராஜாஜியின் கருத்துக்கள்

## காமராஜின் வேண்டுகோள்

தமிழக சட்டசபையின் எதிர்க் கட்சிகளாக உள்ள அனைவரும் ஒன்று சேர்ந்து தி.மு.க.வின் கொள்கைகளையும், நிருவாகத்தையும் எதிர்க்க வேண்டும் என்று திரு காமராஜ் வேண்டுகோள் விடுத்துள்ளார். இதனை நான் மனமார ஆதரிக்கிறேன். பாராட்டுக்குரிய நோக்கம் கொண்டது இந்த வேண்டுகோள். இந்திய மூல அரசியல் சாஸனத்தைத் தகர்க்க முற்பட்டுள்ள மத்திய சர்க்காரின் போக்கிலுள்ள அக்கிரமத்தையும் திரு காமராஜ் உணர்ந்து இவ்விபரீதத்தைத் தடுக்க முற்படமாட்டாரா என்றே ஆசைப்படுகிறேன். சாஸனத்தின் இதய சாரமாகிய மக்கள் உரிமைகளை ரத்துசெய்ய விரும்புவது பெரும் விபரீதமே.

## ஜந்தர் மந்தர்

தில்லியில் 'ஜந்தர் மந்தர்' சாலையிலுள்ள காங்கிரஸ் அலுவலகம் ஸ்தாபன காங்கிரஸுக்கே உரியது என்று தில்லி மாஜிஸ்டிரேட் நியாயம் வழங்கியிருப்பதில் மகிழ்ச்சி கொள்கிறேன். சட்டத்தையும் நீதியையும் அடியோடு புறக்கணித்து இந்த அலுவலகத்தை ஆள்கிற காங்கிரஸ் ஆர்ஜிதம் செய்துகொண்டது மானக் கேடாகும். இந்த நிந்தனைக்குரிய செயலை மாஜிஸ்டிரேட்டின் உத்தரவின்றியே சர்வ சக்தி வாய்ந்த பிரதமரவர்கள் தடுத்திருக்க வேண்டும்.

## வல்லரசாக முடியுமா?

இந்தியா உறுதியாகச் செயல்பட்டால் அது ஒரு பெரிய வல்லரசின் ஸ்தானத்தைப் பெற்று, தென்காசியாவின் கூட்டுப் பாதுகாப்புக்கு அஸ்திவாரமாகத் திகழ முடியும் என்று இந்தியாவுக்கு வந்துள்ள பிரிட்டனின் வெளிவிவகார மந்திரி ஸர் அலெக் டக்ளஸ் ஹ்யூம் கூறியிருக்கிறார். இது நிருபர்கள் தெரிவிக்கும் செய்தி. தில்லியில் உள்ளபோது பிரிட்டிஷ் மந்திரி அவர்கள் நட்பு முறையில் நம்மை வாழ்த்தி, ஊக்குவித்துப் பேசியது இயற்கையே. ஆயினும் உண்மையில் இந்தியா ஒரு வல்லரசாகப் பணிபுரிய வேண்டுமாயின், அது அந்நியக் கடன் சுமையிலிருந்து விடுபட வேண்டும்; இந்தியாவின் ராணுவச் செலவும் கணிசமாகக் குறைக்கப்பட வேண்டும். அந்நிய உதவி பெற்றுக்கொண்டிருக்கும் போதே பெரிய வல்லரசு போல் நடக்க முற்படுவது பிறரது கண்ணியில் சிக்குவதேயாகும். இதற்கு மாறாக நாம் பாகிஸ்தானை நட்பு என்ற கண்ணியில் சிக்க வைத்தாலே வல்லரசு ஸ்தானத்தைப் பெறக் கூடும். இந்தியாவுக்கு எதிராக அந்நிய 'உதவி'யைப் பெருக்கிக் கொண்டு தற்கொலையில் முனைந்துள்ளது பாகிஸ்தான். அதனை நம்மோடு நட்புக் கொண்டு ஒத்துழைக்குமாறு செய்ய வேண்டும். ஒரு தேசத்தின் வளர்ச்சிக்கு மிகவும் முக்கியமான மனித சக்தி இந்தியாவுக்கு நிறைய உள்ளது. இந்தியாவுக்குத் தேவைப்படுவது அதன் பொருளாதார சீர்திருத்தமே. சர்வாதிகார ஆசை அந்நியக் கடன் இவற்றின் விளைவான கடும் வரியும், பண வீக்கமும் நம்மை மேம்படுத்திக் கொள்ளும் பெருமுயற்சியில் சற்றும் உதவி புரியா. சீன மக்களின் ஏகோபித்த தொழிலூக்கமும், அதுபற்றி அவர்கள் கொண்டுள்ள மன நிறைவுமே சீனம் பெற்றுள்ள பெரும் சக்தி






யின் ரகசியங்களாகும். சீன சர்க்காரின் சர்வாதிகாரத்தைப் பற்றி அம்மக்கள் கவலைப்படாமல், தங்களது இயல்புப்படி நன்கு உழைக்கிறார்கள். ஆனால் இந்திய மக்களின் மனப்பான்மை இதற்கு முற்றிலும் மாறானது. ஆயினும் நம் மக்களும் கூட நேர்மைக்கும் கடும் உழைப்புக்கும் சீனத்தின் உதாரணத்திலிருந்து பாடம் பெறுவர் என நம்புவோம்.

## பத்திரிகை தர்மம்

பிரசித்தி பெற்ற 'ஸாடர்டே ரிவ்யூ' பத்திரிகையின் ஆசிரியராக இருந்த நண்பர் நார்மன் கஸின்ஸ் சமீபத்தில் அப்பதவியை ராஜிநாமா செய்திருக்கிறார். இதற்கான காரணங்களை விளக்கி எழுதுகையில் அவர் கூறுகிறார்: ''பல்லாண்டுகள் அநுபவத்தில் நான் கற்றுக்கொண்ட முக்கியமான உண்மை, பத்திரிகை ஆசிரியர்கள் தமது சொந்த ரசனை, ஊக்கம், அக்கறை இவற்றைக் கொண்டே விஷயங்களைத் தேர்வுசெய்து பிரசுரிக்க வேண்டுமே ஒழிய, மற்ற மக்கள் அதைப் படிக்க விரும்புவார்கள் என்று அநுமானித்தும், ஹேஷ்யம் செய்தும் அல்ல.'' இங்கு நார்மன் கஸின்ஸ் சொல்வது பத்திரிகைத் துறையை மட்டுமின்றி, எல்லா விஷயங்களையும் தழுவும் ஒரு கொள்கையாகும். மற்றவர்கள் எதில் மகிழ்கிறார்கள் என்பதைப் பற்றி ஊகங்கள் செய்யாமல், நமது உண்மையான சொந்த உறுதிப்பாடுகளின்படியே நாம் நடக்க வேண்டும். நாகரிக வாழ்வு 'இதில்தான் அடங்கியுள்ளது. பிறரை மகிழ்விப்பிப்பதற்காக எழுதுவதும், பேசுவதும், காரியம் செய்வதும் நல்ல வியாபாரமாக இருக்கலாம்; ஆனால் நாகரிக வாழ்வை வளர்க்க இது உதவாது.

அரசியல் கலப்பற்ற ஒரு பத்திரிகைத் துறையாளர் யூனியனை ஸ்ரீ சாக்ஸா அவர்கள் தொடங்கி வைத்திருப்பதாக உத்தரப் பிரதேசச் செய்தி கூறுகிறது. இந்த யூனியனின் தலைமைக் காரியாலயம் தில்லியில் இருக்கும் எனத் தெரிகிறது. அரசியல் சார்புகளால் மாசுபடாமல் சத்தியத்தை எடுத்தியம்புவதே இந்த யூனியனின் இலட்சியம் என்றறியும்போது மனத்துக்கு உற்சாகமேற்படுகிறது.

## மரக்கறி உணவு

இரக்கம் என்ற அடிப்படையில் எழுந்ததே புலால் உண்ணாமை. மனிதர்களிடம் நாம் காட்டும் பரிவையும் இரக்கத்தையும் மிருகங்களிடமும் நாம் காண்பிக்க வேண்டும். அவற்றுக்குக் கொடுமை இழைப்பதை நாம் தவிர்க்க வேண்டும். கோழிக் குஞ்சும் மற்றப் பிராணிகளும் மனிதனைப் போல் தீவிரமான வலியை உணருவதில்லை என்கிற வாதம் செல்லத்தக்கதல்ல. அஹிம்சையின் மூலம் உணவு தேடிக் கொள்ளும் வழக்கத்தை வம்சாவளியாகப் பின்பற்றுபவர்கள் உள்ளனர். இவர்களை மரக்கறிப் பழக்கத்துக்கு நாம் மாற்ற இயலாமலிருக்கலாம். ஆயினும் இந்தியாவில் புலாலுணவைக் கண்டிப்பாக மறுத்து வந்துள்ள கணிசமான சமூகப் பிரிவினர் சம்பிரதாயப்படியும், சமயப்படியும் தாங்கள் பெற்றுள்ள இந்த நல்ல அம்சத்தை விடவேண்டியதே இல்லை. மரக்கறியே உண்டு வந்த சமுதாயத்தினரும் சமீப காலத்தில் அறிவிழந்து புலாலுணவைத் தேடிப் போவது மகத்தான பரிதாபம். இவர்களில் சிலர் நமது மூதாதையர் வேட்டையாடிப் பிராணிகளைக் கொன்று, அவற்றின் புலாலை எடுத்து உண்டவர்கள்தான் என்று வாதிக்கிறார்கள். ஆயினும் வஞ்சனை செய்யாத பிராணிகளை வளர்த்துவிட்டு, பிறகு அவற்றைக் கொன்று தின்பது மனிதர்கள் பிராணி இனத்துக்குச் செய்யும் கொடூரமான நம்பிக்கைத் துரோகமாகும். அரிசி, பருப்பு, கோதுமை, பால் இவற்றை விட மாமிசம் புஷ்டியானது என்று யாரோ சொன்னதனால் இப்படிச் செய்வது தகாது. ஜீவகாருண்யம் என்பது விலைமதிக்கவொண்ணாத பிதுரார்ஜித செல்வம். புனித வாழ்வின் உயிர் நாடி அதுவே. தானாக நம் சமூகத்தில் வந்துள்ளதும், நம்மால் எளிதில் பின்பற்றக் கூடியதுமான இந்தச் சொத்தை இழக்காதிருப்போமாக!



# களைப்பு நீங்க வழி

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"**ம**துபானத்தினால் களைப்பு நீங்குமென்பது முற்றும் தவறான எண்ணம். மது களைப்பைப் போக்குவதில்லை; கொஞ்ச நேரம் களைப்புத் தோன்றாமல் செய்கிறது. வலியின் காரணத்தை நீக்குவதில்லை; சிறிது நேரத்துக்கு வலி தெரியாமல் செய்கிறது" என்கிறார், டாக்டர் கோர்ட்னி விக்ஸ் என்னும் பிரபல வைத்தியர்.

இப்படி அறிவை மயக்கிக் கொண்டு களைப்புத் தோன்றாமல் செய்துகொள்வது நல்லதா என்று யோசிக்க வேண்டும். களைப்பு என்பது என்ன? உடம்பு அதிகமாக உழைத்தால் அதன் பயனாக இரத்தத்தில் விஷ அணுக்கள் சேர்கின்றன. இந்த விஷ அணுக்களை வெளியே தள்ள இரத்தம் முயற்சி செய்யும் போதுதான் உடம்பில் களைப்பும் வலியும் தோன்றுகின்றன. இவை தெரியாமலிருப்பதற்காகக் குடித்துப் போதை கொள்வது, இயற்கை வேலையைத் தடைசெய்வதேயாகும்.

இது மட்டுமன்று. ஆரம்பத்தில் கொஞ்சமாகக் குடித்தாலும் உணர்ச்சி மழுங்கி வலி தோன்றாமல் இருக்கும். நாளாக ஆக, மேலும் மேலும் அதிகமாய்க் குடித்தால்தான் இந்தப் பயன் உண்டாகும். முடிவில், அறிவு அடியோடு கெட்டு உடல் உணர்ச்சியும் அற்றுப் போய்விடும். சொற்ப நேரம் களைப்புத் தெரியாமல் இருப்பதற்காக, இப்படி உடம்பையும் அறிவையும், ஆத்மாவையும் அடியோடு பாழாக்கிக் கொள்வது நல்லதா என்று சிந்தித்துப் பாருங்கள்.

அப்படியானால், களைப்புத் தீர்வதற்குச் சரியான வழிதான் என்ன? மூளை சிகிச்சையில் பெயர் பெற்ற ஸர் மாரிஸ் கிரெக் என்பவர் சொல்லுகிறார்:

"நன்றாய்த் தூங்குங்கள். தசை நார்களின் களைப்பைப் போக்கிப் புதிய பலம் தரும் அரும் மருந்து தூக்கமேயாகும். இதற்கு மதுவின் உதவியைத் தேட வேண்டாம். மதுபானத்தினால் உண்டாவது மயக்கம்; அது தூக்கமன்று. இந்த மயக்கம் விளைவதற்கும் கூட நாளுக்கு நாள் குடியின் அளவை அதிகரிக்க நேரிடும்."

உழைத்து வேலை செய்யும் தொழிலாளிகள் நல்லுணவு அருந்தி, தூய காற்றுள்ள இடத்தில் படுத்துத் தூங்க வேண்டும். களைப்பு நீங்குவதற்கு இதைவிடச் சிறந்த உபாயம் வேறு கிடையாது.

—'விமோசனம்'

சுக்ல (1929) மார்கழி

நன்றி: குமரி மலர்.



# கர்மமும் பக்தியும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் விதேக முக்தி அடையப் போகிறார் என்று தெரிந்தபோது சிஷ்யர்களெல்லாம் அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். ''எவ்வளவோ வேதாந்தபரமான உபதேசங்கள் அளித்தீர்கள். அதில் பல விஷயங்கள் எங்களுக்குப் புரியவே இல்லை. கடைத்தேறுவதற்குச் சுலபமான வழி ஒன்று சொல்ல வேண்டும்'' என்று ஆசாரியரிடம் பிரார்த்தித்துக் கொண்டார்கள். அப்போது ஆசாரியாள் 'ஸோபான பஞ்சகம்' என்று இந்த சுலோகங்களை உபதேசித்தார்கள்.

''வேதம் வகுத்த வழியைத் தினந்தோறும் பின்பற்ற வேண்டும். வேதம் கூறுகிறபடி கர்மங்களைத் தவறாமல் அநுஷ்டானம் பண்ணுங்கள். இதையே ஈசுவர பூஜையாக நினைத்துப் பண்ணுங்கள். ஆசைவாய்ப்பட்டு நம் மனசுக்குப் பிடிக்கிற காரியங்களைச் செய்வது என்பதில்லாமல், லோக உபயோகமாக அவரவர்களுக்கும் விதிக்கப்பட்டுள்ள கர்மாவைச் செய்யுங்கள்'' என்ற கருத்துடன் தொடங்குகிறது 'ஸோபான பஞ்சகம்'.

கர்மத்தை ஒழுங்காகச் செய்பவர்கள் இருக்கிறார்கள். பூஜை, உற்சவம், பஜனை இவற்றை அழகாகச் செய்கிறவர்களும் இருக்கிறார்கள். இவர்கள் கர்ம அநுஷ்டானம் செய்வோரைப் பார்த்து, ''இத்தனை கர்மா செய்தும் என்ன பிரயோஜனம்? கொஞ்சமாவது மனசு உருகி பக்தி செய்யாவிட்டால் என்ன பயன்?'' என்று தாழ்வாக எண்ணுகிறார்கள். கர்ம மார்க்கக்காரர்களோ இவர்களைப் பார்த்து, ''செய்ய வேண்டிய கர்மத்தில் சிரத்தையில்லை. ஆடம்பரமாக மணி அடித்துக் கொண்டும், தானம் போட்டுக் கொண்டும் இருந்தால் போதுமா?'' என்று நினைக்கிறார்கள்.

ஆசாரியாள் 'ஸோபான பஞ்சக'த்தில் சொல்லியிருப்பதைப் பார்த்தால் கர்மத்தையே ஈசுவர பூஜையாகச் செய்ய வேண்டும் என்று தெரிகிறது. கர்மத்தையும் செய்ய வேண்டும்; ஈசுவரனையும் மறக்காமலிருக்க வேண்டும். கர்மங்களை ஈசுவரார்ப்பணமாகச் செய்ய வேண்டும். இது மிகவும் உயர்ந்த நிலை. கர்மங்களைச் செய்யும்போதே, அதில் பற்றில்லாமல் செய்து, சித்தத்தை ஈசுவரனிடம் வைத்து, அவனுக்குக் கர்ம பலனை அர்ப்பணம் செய்வது சாதாரண ஜனங்களால் இலேசில் முடிகிற காரியமில்லை. சாமானிய ஜீவர்கள் ஒரு கர்மம் என்று இறங்கிவிட்டால் அப்போது பகவத் ஸ்மரணம் குறைந்துதான் போகும். ஆகவே, தனித் தனியாகக் கர்மாவும் வேண்டும், பக்தியும் வேண்டும். நாளடைவில் கர்மத்தையே பூஜையாகச் செய்கிற உத்தம நிலை சித்திக்கும்.

கர்மம் செய்கிறவனிடம் பகவான் பிரீதி அடைவானா, பூஜை செய்கிறவனிடம் பிரீதி அடைவானா? ஒரு பிரபுவிடம் இரண்டு வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் வேலை எதுவும் செய்யாமல் அந்தப் பிரபுவை ஸ்தோத்திரம் செய்து கொண்டே இருக்கிறான். இன்னொருவன் வெகு நேர்த்தியாக வேலை செய்கிறான். என்றாலும் அந்தப் பிரபுவிடம் துளிக்கூட அன்போ பாசமோ காட்டாமல் வேலையை மட்டும் கவனிக்கிறான். சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு அருகில் நின்று ஸ்தோத்திரம் பண்ணுகிறவன்தான் பிரபுவின் பிரீதிக்குப் பாத்திரமாக முடியும் என்று தோன்றும். பிரபு அசடாக இருந்தால் இப்படியே நடப்பான். ஆனால் அவன் புத்திசாலியாக இருந்தால், கண்ணில் படாமல் வேலை செய்கிறவனிடமே அதிகப் பிரியத்துடன் இருப்பான். ஈசுவரன் அசட்டுப் பிரபு இல்லை. தன்னை ஸ்தோத்திரம், பூஜை செய்கிறான் என்பதால் மட்டும் ஒருவனுக்கு அவன் அநுக்கிரகம் செய்துவிட மாட்டான். தான் விதித்த கர்மங்களைச் செய்கிறவனிடமே அதிகப் பிரீதி கொள்வான். ஆனாலும் அந்தக் கர்ம மார்க்கக்காரன் மனசில் அன்பே இல்லாமல் 'வெட்டு வெட்டு' என்று வேலை மட்டும் செய்தால் அவன் பகவத் பிரீதியைப் பூரணமாகக் கிரகிக்க முடியாது. 'பகவானுக்காகவே கர்மம் செய்கிறோம், அதில் சுய லாபங்கள், சொந்த ஆசைகள் ஏதும் இல்லை' என்று பக்தி உணர்வோடு கர்மம் செய்தாலே பகவத் கிருபையைப் பூரணமாகக் கிரகிக்க முடியும். எப்போதும் பகவானை ஸ்மரிக்கிற இந்த நிலை வருவதற்கு ஆரம்பமாக பூஜை, பஜனை எல்லாம் செய்து அவ்வப்போது பகவானை ஸ்மரிக்க வேண்டியதும் அவசியம்.





# செயல் திறன் மிக்க சேட்னா



அணுசக்திக் கமிஷனின் புதுத் தலைவராக ஸ்ரீ ஹோமி நஸ்ஸர்வான்ஜி சேட்னா நியமிக்கப்பட்டிருப்பது குறித்துப் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

டாக்டர் விக்ரம் சாராபாயின் மறைவுக்குப்பின் அவர் வகித்து வந்த இத்தலைமைப் பதவிக்கு ஸ்ரீ சேட்னாதான் உரிய வாரிசு என்று எல்லோராலுமே மதிக்கப்படும் அளவுக்கு அவர் அனுபவமும் ஆற்றலும் பெற்றுள்ளார். நம் நாட்டில் அணுசக்திக் கமிஷனின் அலுவல்கள் ஆரம்பித்தது 1954ம் ஆண்டில்தான். ஸ்ரீ சேட்னா, அந்த ஆரம்ப காலத்திலிருந்தே அணுசக்தி சம்பந்தப்பட்ட பல துறைகளில் செயல் புரிந்து பாடுபட்டு, அதன் வளர்ச்சியுடன் இணைந்து பணியாற்றிய பெருமை உள்ளவர். ஒருவிதத்தில் இந்திய அணுக்கமிஷனின் ஆரம்பத்துக்கு முன்னாலேயே, ஸ்ரீ சேட்னா அது சம்பந்தமாகப் பணியாற்ற ஆரம்பித்து விட்டார் என்றுகூடச் சொல்ல வேண்டும்.

1949ம் ஆண்டிலிருந்தே சர்க்கார் ஆதிக்கத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் "ரேர் எர்த்" கம்பெனியில் ஸ்ரீ சேட்னா என்ஜினீயராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கினார். கேரளத்தில் பெருமளவு கிடைக்கும் "மானேஸைட்" மணல்களில் அணுசக்தி உற்பத்திக்கு இன்றியமையாத யுரேனியம் — 233 தயாரிக்க உபயோகமாகும் தோரியம் என்ற கனிப் பொருள் கலந்துள்ளது. இதைப் பிரித்தெடுத்து, உபயோகமில்லாத மணலை அகற்றி, தேவைப்படும் விலைமதிப்பில்லாத் தோரியத்தை நாட்டின் நலனுக்காகச் சேகரிக்க ஆலப்புழையில் தொழிற்சாலை ஒன்றை நிறுவி, அதை வெற்றிகரமாக நடத்தும் பொறுப்பை ஸ்ரீ சேட்னா மகிழ்வுடன் ஏற்றுச் செய்து முடித்தார். அங்கு லாபகரமாக இன்று இயங்கிக் கொண்டிருக்கும் தொழிற்சாலை திரு சேட்னாவின் செயல் திறனுக்கு முதல்சான்று.

அணுசக்தி மூலப் பொருள்களைத் தேடிச் சேகரிக்கும் ஆதாரப் பணி ஒரிஸ்ஸா சிங்பூம் மாவட்டத்திலும் நார்வார்ப்பூர், பாட்மன் பகுதியிலும், உத்தரப் பிரதேசத்தில் சமோலிப் பகுதியிலும், ஹிமாலய வட்டத்திலும் தமிழ்நாடு, கேரளத்திலும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதற்காக மூன்று கோடி ரூபாய் நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சேட்னாவின் தலைமையில் இந்தப் பணி மேலும் சுறுசுறுப்படையும் என்று எதிர்பார்க்கலாம்.

இந்த முதல் அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு, ட்ராம்பே பகுதியில் ஒரு தோரியம் தொழிற்சாலையையும், அணுசக்தி உற்பத்திக்கு ஏற்றவாறு உரேனிய — 233 கனிஜத்தைத் தயாரிக்க ஒரு தொழிற்சாலையையும் நிறுவும் பணியை மேற்கொண்டு, அவற்றைத் தமது நேர் மேற்பார்வையில் ஸ்ரீ சேட்னா கட்டி முடித்துத் தந்தார். இவை டிராம்பே பகுதியில் சீராக இன்று இயங்கிக்கொண்டிருக்கின்றன. இவைகளே அணுசக்தி வளர்ச்சிக்கு ஆதாரங்கள். இயற்கையாகக் கிடைக்கும் பொருள்களை, அணுசக்தி இணைப் பொருளாக மாற்றும் முதல் படி நிறுவனங்கள்.

இந்த அனுபவத்தைப் பயன்படுத்தி, 1959ம் ஆண்டில் ட்ராம்பே பகுதியிலேயே ஒரு ப்ளுட்டோனியம் யந்திர ஏற்பாட்டு நிறுவனத்தை ஸ்தாபிக்கும் பணியைத் திரு சேட்னா தம் முழுப் பொறுப்பில் ஏற்றுக் கொண்டார். பூமியில் பெரும் அளவில் கிடைக்கக்கூடியதகுந்த எரிபொருள் உரேனியம் — 235 ஒன்றுதான். இதைத் தவிர





- இடது பக்கம்: கல்பாக்கம் அணுமின் நிலையத்தின் ஒரு தோற்றம்
- ரியாக்டர் நெம்பர் 1 கட்டடத்துள் எஃகுத் தூண்கள் எழும்பிக் கொண்டிருக்கின்றன.
- கடலிலிருந்து செல்லும் இரும்புப் பாலப் பாதை.
- இந்தப் பக்கம்: ஸ்ரீ ஹோமி நஸ்ஸர்வான்ஜி ஸேட்னாவும் அவரதுமனைவி ஸ்ரீமதி குல்-ஸேட்னாவும்.
- இந்தியாவில் இயங்கி வரும் அணுசக்தி நிலையங்களும், அதற்குத் தொடர்பான நிறுவனங்களும்.
- கல்பாக்கம் "பம்பு ஹவுஸ்" சுவர்களும் அத்துடன் இணைந்த இரும்புப் பாலமும்.



தொடரியக்கத்தை உண்டாக்கவல்ல இரண்டு செயற்கைப் பொருள்களும் உண்டு. ஒன்று புளுட்டோனியம். மற்றொன்று உரோனியம் — 233 என்பது. இது மனிதன் செய்த செயற்கை உரேனிய அணு. இது உண்டாக்கப்படும் வகை பிளவுறும் புளுட்டோனியம் உண்டாவதை ஒத்திருக்கிறது. தோரியம் 232 எனப்படும் பொருளிலிருந்து இது செய்யப்படுகிறது. இதிலிருந்து புளுட்டோனியம் தயாரிப்பு ஏற்பாடு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதும் தோரியம் தயாரிப்பு யந்திர ஏற்பாட்டுடன் இணைந்துள்ளது என்பதும் விளங்கும். மேலும் புளுட்டோனியம் தயாரிப்பு யந்திரசாலை முழுக்க முழுக்க நுட்பம் வாய்ந்த பொறிஇயல் கருவிகளாலேயே, இயக்கப்பட வேண்டிய அமைப்பு. சாதாரண தொழிற்சாலைகளைப் போல் தொழிலாளி எதிர் நின்று வேலை செய்யக்கூடியதல்ல. இந்த ஏற்பாட்டை அமைப்பது திறமை மிக்க வேலை. ஒருவரது முழு சாமர்த்தியத்தையும், அறிவையும் உபயோகித்தே செய்து முடிக்கக் கூடியது. இத்தகைய மகத்தான வேலையை, தாமே மேற்கொண்டு, இந்திய விஞ்ஞானிகளையே துணை கொண்டு, எல்லா நுட்பப் பிரச்னைகளையும் தாமே தீர்த்து, 1964ம் ஆண்டுக்குள் ஆரம்பித்தபோது குறிப்பிட்ட கால வரையறைக்குள், முதலில் போட்ட முதலீட்டு, மதிப்புத் தொகைக்குள்ளேயே, முடித்துத் தந்த பெருமை திரு ஸேட்னாவுக்கு உண்டு.

இதே போன்ற முறையில், யுரேனியம் தயாரிக்கும் யந்திர நிறுவனம் ஒன்றையும் ஜடுகுடா என்ற இடத்தில், தமது மேற்பார்வையில், ஆரம்பித்து 1967ம் ஆண்டில் கட்டி முடித்தார் திரு ஸேட்னா. இங்கே 375 லட்சம் ரூபாய் மதிப்புள்ள உரேனியம் 1970—71ம் ஆண்டில் தயாரிக்கப்பட்டது என்பதுடன், ரூ. 30 லட்சம் லாபம்கூடக் கிடைத்தது.

இதைத் தவிர 1956—58 ஆண்டுகளில் கானடா நாட்டு உதவியுடன் இயங்கிய, அணுசக்திக் கருஉலை (React r)யை நிர்வகிக்கும் பொறுப்பையும் திரு ஸேட்னா ஏற்றுத் திறம்பட நிறைவேற்றினார்.

அவருடைய பொறி இயல் நுட்ப அறிவையும், செயல் திறமையையும் பாராட்டி அரசாங்கம் 1959ம் ஆண்டில் பத்மஸ்ரீ என்ற கௌரவத்தையும், 1966ம் ஆண்டில் பத்மபூஷண் விருதையும் அளித்துக் கௌரவித்துள்ளது. சாந்திஸ்வரூப் பாட்நகர் பரிசையும் திரு ஸேட்னா 1960ம் ஆண்டில் பெற்றுள்ளார்.

ஸ்ரீ ஸேட்னா, "அறிவு, விவேகம், பணிபுரிவதில் திறம் மிக்கவர்" என்பதைப் பாராட்டி அமெரிக்க மிச்சிகன் பல்கலைக் கழகம் தனது 150வது ஆண்டு நினைவுப் பரிசை அவருக்கு அளித்துக் கௌரவித்துள்ளது.

அவருடைய திறமை காரணமாகப் பல விஞ்ஞான, பொறி இயல் கழகங்களிலும்,

தி.சா.ராஜு எழுதும்

# துணைவழி

இம்மாத நாவல்
27.2.1972

சங்கங்களிலும் அங்கத்தினராகவும், முக்கியஸ்தராகவும் திரு ஸேட்னு பணியாற்றி வருகிறார். முக்கியமாக, ஐ. நா. கமிட்டி ஒன்றில் அணுசக்தியைப் பின்தங்கியுள்ள நாடுகளின் பொருளாதார, வாழ்க்கைத்தர முன்னேற்றத்துக்கு எவ்வாறு பயன்படுத்தலாம் என்பதைப் பற்றி திரு ஸேட்னு விரிவான அறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்திருக்கிறார்.

சர்வதேச அணுசக்தி ஸ்தாபனத்தின் விஞ்ஞானிகள் ஆலோசனைக் கமிட்டியில் ஸ்ரீ ஸேட்னு அங்கம் வகிக்கிறார்.

தமிழ்நாட்டுக்குத் திரு ஸேட்னுவின் புதிய பதவி தனிப்பட்ட முறையில் முக்கியத்துவம் உள்ளது என்பதையும் இங்கே சொல்ல வேண்டும். சாவாராவிலும், மணவாளக்குறிச்சியிலும் அபூர்வ மண் வளத்தை ஆதாரமாகக் கொண்டு இயங்கும் ஆலைகள் விரிவடைவதுடன், சென்னைக்கடுத்த கல்பாக்கத்தில் வேகமாக உருப்பெற்று வரும் அணுமின் நிலையம் திரு ஸேட்னுவின் தலைமையில் சீக்கிரமே முற்றுப்பெறும்.

கனடாவில் உள்ள டகளஸ் பாயின்ட் (Douglas Point) அணு மின் நிலையத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ள சில நவீன முறைகளைக் கல்பாக்க நிறுவனத்தில் புகுத்த முடியுமா என்பதை ஆராய்ந்து, அதன் விளைவாகச் செய்முறைகளில் சில மாறுதல்கள் கூடச் செய்யப்பட்டுள்ளன.

இந்த மின் நிலையத்துக்கான எல்லா யந்திர உறுப்புக்களும், சாதனங்களும் நமது நாட்டிலேயே கிடைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும். பாரத் எலெக்ட்ரிகல்ஸ் முக்கியமாகப் பெரிய உலைகளைத் தயாரித்தளிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

தமிழ் நாட்டுக்குத் தொழில் வளர்ச்சி காரணமாக மின்சாரத் தேவை வளர்ந்து கொண்டே போகிறது. தற்போதுள்ள வசதிகளால் இத்தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள முடிவதில்லை. ஆகையால் தான் கல்பாக்கத்திலுள்ள அணு மின் நிலையம், வெகு விரைவில் பூர்த்தியாக வேண்டும், அதிலிருந்து கிடைக்கும் பெருமளவு மின்சாரம் நம் மாநிலத்தின் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று தொழில் வர்க்கம் ஆவலாக இருக்கிறது. மஹாராஷ்டிரத்திலும் குஜராத்திலும், பருவ மழை பொய்த்தாலும், நீர் மின்சார சப்ளை குறைந்தாலும், தாராபூர் அணு மின் நிலையத்தின் சப்ளை குறைவில்லாது கிடைப்பதால், மின்சாரத் தட்டுப்பாடு ஏற்படுவதில்லை. அம்மாதிரியான நிலை தமிழ்நாட்டுக்கும் ஏற்பட வேண்டும். 1975ம் ஆண்டில் கல்பாக்கம் நிலையம் பூர்த்தியாக வேண்டும் என்பது திட்டம். திரு ஸேட்னுவின் சுறுசுறுப்பான ஆக்கத்திறன் கால கெடுவுக்குள் இதை முடித்துக் கொடுக்கும் என்று நம்பலாம்.

கல்பாக்கத்தில் உருவாகிக் கொண்டு வரும் நிறுவனங்களில் அணுக் கரு ஆலை ஆராய்ச்சி நிலையம் குறிப்பிடத்தக்கது. இங்கே அணு சக்தியை உண்டாக்க வல்ல பல்வேறு அணு சக்தி மூலப் பொருள்கள் குறித்து எல்லாவித ஆராய்ச்சிகளும் மேற்கொள்ளப்படும். சுருங்கச் சொல்லின், கல்பாக்கமும் ஒரு ''குட்டி ட்ராம்பே'' யாகவே வளரும். சுமார் 2500 விஞ்ஞானப் பொறி இயல் நிபுணர்கள் இங்கே முடிவு கட்டத்தில் பணியாற்றிக் கொண்டிருப்பார்கள். பாபா அணுசக்தி ஆராய்ச்சி நிலையத்துக்கு அநுசரணையாக இது வேலை செய்யும்.

கல்பாக்கம் நிறுவனங்களை அமைக்கும் முழுப் பொறுப்பும் அனுபவம் மிகுந்த விஞ்ஞானிகளிடமும் பொறி இயல் வல்லுநர்களிடமும் விடப்பட்டிருக்கிறது. எல்லோரும் அணுசக்தி ஆராய்ச்சியிலும், நிறுவனங்கள் கட்டி முடிக்கும் துறையிலும் தேர்ச்சி பெற்றிருப்பதுடன் செய்திறன் உள்ளவர்கள். அவர்களுடைய முழு சாமர்த்தியத்தையும் காட்டக் கல்பாக்கம் நிறுவனங்கள் பூரண வாய்ப்பு அளிக்கும். எல்லாம் நிறைவுபெற்று ஸ்தாபனம் இயங்கும் போது, அது நம்முடைய விஞ்ஞானிகளுக்கும், என்ஜினீயர்களுக்கும் ''சபாஷ்'' சொல்லும் முறையில் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். திரு ஸேட்னுவின் தலைமையே உற்சாகத்தைப் பெருக்கும் ஓர் அசாதாரண சக்தியாகும்.

— எம். எஸ். சிவஸ்வாமி

[திரு ஸேட்னுவின் பதவிக் காலம் நாட்டுக்கு வளம் கொழிக்கும் காலமாக ஆகுக என வாழ்த்துகிறோம். அவரது படத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறோம். — ஆசிரியர்]

அமெரிக்காவில் ஹிப்பிகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதால் இவர்களுக்காகவே பல நிறுவனங்கள் புதுமையான தயாரிப்புக்களை அறிமுகப்படுத்தி யுள்ளன. ஒரு நிறுவனம் ஹிப்பிகள் அணிய வசதியாக அழுக்கேறிய (புதிய) உடைகளை உற்பத்தி செய்கிறது! மற்றொரு நிறுவனம் சுத்தமாக இருக்கும் தலைமயிர் கூட அசுத்தமாகத் தெரிவதற்காக ஒரு பவுடர் கண்டு பிடித்திருக்கிறது! - சம்பத்குமாரி

ஆதாரம்: ''நியூடைம்ஸ்''



# இதோ, ஒரு <u>தீமையற்ற</u> தலைவலி மாத்திரை!



# அவேதன்®

**அற்புத 'எபெப்' அடங்கியது.**

(என்-அஸிடில்-பி-எமினோஃபினோல்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக்கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள். ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.



அவேதன்—அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது.

SQUIBB* SARABHAI CHEMICALS

* இ.ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. சாம்சந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi HPMA 37A/70 TAM




## 3. எல்லாம் விழுங்கும் மேற்கு பாகிஸ்தான்

இந்தியாவை இரு கூறுகளாகப் போடாமல் பிரிட்டிஷார் வெளியேறி யிருந்தால் நல்லதாக இருந்திருக்குமா? இந்தக் கேள்வியைப் பலர் இன்று கேட்கிறார்கள். அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பாதான்! மகாத்மா காந்தி இந்தியாவைத் துண்டாடுவது வருங்காலத்துக்கு நல்லதல்ல என்றே எண்ணினார். ஆனால் அவர் காலத்திலேயே இரு சமூகப் பிரச்னை பெரியதாகி விட்டதே! ஜின்னாவும் முஸ்லிம் லீகும்தான் முஸ்லிம்களின் பிரதிநிதிகள் என்ற ஏட்டிக்குப் போட்டி நிலைமை உருவாகியது. அதற்கு ஊக்கமூட்டியது வெள்ளையர்கள். இதனால்தான் தேசிய முஸ்லிம்கள் என்று நாட்டின் நலனைப் பெரியதாகக் கருதியவர்கள் தங்களை அவ்வாறு விவரித்துக் கொள்ள வேண்டி வந்தது. மகாத்மா காந்தியின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமாயிருந்த மௌலானா அபுல்கலாம் ஆஸாத், உருதுவிலும் அராபி மொழியிலும், பாரசீக மொழியிலும் கரை கண்டவர். மடை திறந்தது போல் மூன்று மொழிகளிலும் பேசும் ஆற்றல் கொண்டவர். இரு சமூகக் கூற்று முஸ்லிம்களுக்கே நல்லதல்ல என்று ஆஸாத் அபிப்பிராயப்பட்டார் என்பதுடன் தயங்காமல் இயன்றவரை பாகிஸ்தான் உருவாவதைத் தடுக்கவும் முயன்றார். இதனால் அவருக்குக் கிட்டியது என்ன? ''ஆஸாத், காங்கிரஸின் கைப்பிள்ளை'' என்ற இளக்காரப் பேச்சு. வெள்ளையர்களே வெட்கிக் குனியும்படியாக டிப்டாப்பாக உடையணிந்து முஸ்லிம்களில் ஒரு பெரும் பகுதியை மயக்கிய ஜின்னாவுக்கு உருதுவில் பேசத் தெரியாது. அவர் வாழ்நாளெல்லாம் ஆங்கிலத்திலேயே பேசிய வழக்கறிஞர். ஆஸாதைப்போல் குரானைக் கரை கண்டவர் அல்ல. ஆனால் காலத்தின் கோலம் முஸ்லிம் சமூகத்தில் ஒரு பெரும் பகுதி அவரை நம்பியது. பாகிஸ்தானையும் அடைந்தது. பாகிஸ்தான் உண்டாவதற்கு ஒப்புக் கொள்ளாமல் இருந்திருந்தால் இந்தியா சுதந்திரமடைவதற்குக் காலம் பிடித்திருக்காது என்று சொல்பவர்களுக்குச் சில வார்த்தைகள்:

1946ல் பிரிட்டிஷார் இடைக்கால அரசை டில்லியில் ஏற்படுத்தினார்கள். ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு பிரதமரானார். ஜனாப் லியாகத் அலிகான் நிதி மந்திரி, சர்தார் வல்லபாய் பட்டேல் உள்நாட்டு மந்திரி. பட்டேல் நிதி இலாகாவை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பலர் அபிப்பிராயப் பட்டனர். ஆனால் அவர் அதற்கு இசையவில்லை. இந்த இடைக்கால சர்க்காரும் ஆமை வேகத்தில் செயல்பட்டது. படேல் ஒரு கட்டத்தில் பிரலாபித்தார். ''ஒரு பியூனை நியமிப்பது கூட என்னால் முடியாது. லியாகத் முட்டுக்கட்டை போடுகிறார்.'' இதைத் தவிர அரசில் முஸ்லிம் ஊழியர்கள் தங்கள் தலைவர்கள் சொல்வதைத்தான் கேட்பது என்று முடிவு செய்து







1. பத்திரிகை நிருபர்களுடன் 'மைக்'குகளும் மொய்க்கின்றன முஜீபுர் ரஹ்மானை!
2. போக்குவரத்து மந்திரி மன்ஸுர் அலி.
3. வர்த்தக மந்திரி நஜ்ருல் இஸ்லாம்.
4. மின்விசை மந்திரி கண்டேகர் முஷ்டக் அகமத்.



ஷிக்கர் படகுத் துறை.

பிடிக்கப்பட்ட பாகிஸ்தான் டாங்கின்மீது பங்க்ரா நடனம்.

இந்தியக் கப்பல்கள் இதுபோன்ற ஏவுகணைகளைப் பயன்படுத்தின.

கே. ஸ்ரீநிவாசன்

செயல்பட்டனர். இதனால் நாட்டுக்கு நல்லது எதுவும் ஏற்படவில்லை. அவ்வளவு தூரம் சமூகப் பிரிவினை விஷம் பரவி விட்டது. 1945ல் ஆசிய உறவு மகாநாடு டில்லியில் கூடிற்று. அப்பொழுது இந்தியா சுதந்திர நாடாகவில்லை. ஆகையால் இந்தியாவுக்குக் கொடி எதுவும் கிடையாது. மகாநாட்டில் மற்ற நாடுகளின் கொடிகள் பறக்கும். ஆகையால் இந்தியா மூவர்ணக் கொடியை (சர்க்கா இல்லாமல்) பறக்க விடவேண்டும் என்று அப்பொழுது பிரதம மந்திரியாக இருந்த நேரு முயன்றார். முஸ்லிம் லீகுடன் வெகுவாக வாதிட்டுப் பார்த்தார். ஆனால் ஜின்னா இசையவில்லை. இதனால் இந்தியக் கொடி இல்லாமல் மகாநாடு நடந்தது. நேருவுக்குப் பெரிய மனத்தாங்கல். இம்மாதிரிச் சூழ்நிலையில் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டுதான் பாகிஸ்தான் உருவானால் ஆகட்டும் என்று காங்கிரஸ், பிரிவினைத் திட்டத்துக்குத் தன் சம்மதத்தைத் தெரிவித்தது. பெரும்பாலும் முஸ்லிம் பகுதிகளான வட மேற்கு மாநிலம், பலுசிஸ்தான், சிந்து, பஞ்சாபில் ஒரு பகுதி மேற்கு பாகிஸ்தானாகுமென்றும், பெரும்பாலும் முஸ்லிம்கள் வாழ்ந்த கிழக்கு வங்கம் கிழக்குப் பாகிஸ்தான் ஆகும் என்பதும் பிரிட்டிஷ் திட்டம். இரு பாகிஸ்தான்களுக்கு மிடையே ஆயிரம் மைல்கள் கடப்பு. அறிவுக் கொவ்வாத தொரு கோர அரசியல் சிருஷ்டி. அதைவிடக் கோரத் திட்டம் உத்தரப் பிரதேசத்திலும் மத்தியப் பிரதேசத்திலும் உள்ள முஸ்லிம்கள் மேற்குப் பாகிஸ்தானுக்குக் குடி போக வேண்டும் என்றும், பீஹார் முஸ்லிம்கள் கிழக்குப் பாகிஸ்தானில் குடியேற வேண்டும் என்றும் முடிவானதுதான்.

பல லட்சம் மக்கள் தங்கள் வீடு வாசல்களை விட்டு முன்பின் தெரியாத பிரதேசத்துக்குச் செல்வது என்ற நிலைமை ஏற்பட்டதே உலக சரித்திரத்தில் ஒரு விசித்திர அத்தியாயம். எவ்வளவு இன்னல்கள், எவ்வளவு கொலைகள், எவ்வளவு நஷ்டம்? காலத்தின் கோலம். இதில் விசேஷம் என்னவென்றால் பாகிஸ்தானுக்கு முஸ்லிம்கள் குடியேறிய பிறகும் நான்கு கோடி முஸ்லிம்கள் இந்தியாவில் இருந்தார்கள். ஹிந்துக்கள் மேற்குப் பாகிஸ்தானில் அதிகம் இல்லை. கிழக்குப் பாகிஸ்தானில் சுமார் ஒன்றரைக் கோடி ஹிந்துக்கள் இருந்தார்கள். பாகிஸ்தான் உருவான பிறகு ஜின்னாவுக்குச் சில விஷயங்கள் தெள்ளத் தெளிவாகப் புரிந்தன. ''இனி முஸ்லிம், கிறிஸ்துவர், ஹிந்து, பார்ஸி என்ற பாகுபாடுகளை மறந்து நாம் பாகிஸ்தான் குடிமக்களாவது அவசியம்'' என்று அவர் பிரசாரம் செய்யலானார். ஆனால் ''நாங்கள் முதலில் முஸ்லிம்கள், பிறகு பாகிஸ்தானிகள்'' என்று உத்தரப் பிரதேசத்திலிருந்து சென்ற முஸ்லிம்களும் பஞ்சாபி முஸ்லிம்களும் விதண்டா வாதம் செய்தார்கள். அது மட்டுமல்ல; பாகிஸ்தான் உருவான பிறகு முஸ்லிம்களுக்கான தாயகம் என்ற புரளிக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. இஸ்ரேலை யூதர்களின் தாயகமாக உண்டாக்கினார்கள். அங்கு இன்றுகூட உலக நாடுகளிலிருந்து யூதர்கள் குடியேறுகிறார்கள். இஸ்ரேல் அரசால்







வரவேற்கப் படுகிறார்கள். ஆனால் பாகிஸ்தானில் இனி முஸ்லிம்கள் குடியேறுவதை எடை போட்டுத்தான் அனுமதிப்போம் என்றார்கள் ஆட்சி பீடத்தில் அமர்ந்தவர்கள். பஞ்சாப் முஸ்லிம்களும் உத்தரப் பிரதேசத்திலிருந்து குடியேறிய முஸ்லிம்களும் தாங்கள்தான் அசல் முஸ்லிம்கள் என்றும் மற்றவர்கள் அவ்வளவு உயர்ந்தவர்கள் இல்லை என்பது போலும் நடந்து கொண்டார்கள். சுமார் இருபத்துநான்கு வருஷங்களுக்குப் பிறகு வங்கத்து முஸ்லிம்கள் மட்டமானவர்கள் என்று பாகிஸ்தான் உதாசீனம் செய்ததில் ஆச்சரியம் இல்லை. பாகிஸ்தான் உருவாவதற்கு வங்க முஸ்லிம்களின் கிளர்ச்சி கொஞ்ச நஞ்சம் அல்ல. நவகாளியில் ஹிந்துக்கள் கொல்லப்பட்டதும் அதையடுத்து மகாத்மா காந்தி நவகாளி யாத்திரையைத் தொடங்கி லட்சோப லட்சம் மக்களின் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்ததும் தெரிந்ததே. அதற்கு முன் கல்கத்தாவில் ஓர் ஒத்திகையே நடந்தது. அப்பொழுது முஸ்லிம்களின் அனல் கக்கும் தலைவராக இருந்த ஸ்ரீ எச். எஸ். சுஹ்ரவர்த்தி அந்நகரத்தில் பாகிஸ்தான் கொடுக்கப்படாவிட்டால் என்ன நடக்கும் என்பதற்கு அறிகுறிகள் காட்டினார். ''கல்கத்தாப் படுகொலை'' என்பது இப்போது பிரபலமாகிவிட்டது. சில தினங்களுக்கு அந்நகரத்தில் சட்ட திட்டம் எதுவும் இல்லாமல் போய்விட்டது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையே ஒரு யுத்தமே நடந்தது. கத்திகள், கற்கள் முதல் துப்பாக்கிகள் வரை எல்லாம் உபயோகப்படுத்தப் பட்டன. பல்லாயிரம் மக்கள் அவதிப்பட்டனர். இதே சுஹ்ரவர்த்திதான் பிறகு மகாத்மாகாந்திக்குச் சீடர் என்று சொல்லிக் கொண்டு அவருடன் கலவரத்தால் பீடிக்கப்பட்ட சில ஸ்தலங்களுக்கு விஜயம் செய்தார். மகாத்மா காந்தியும் ஜனாப் சுஹ்ரவர்த்தியை ''ஷஹீத் சுக்ரவர்த்தி'' என்று அழைத்தார். ''ஷஹீத்'' என்றால் வீரத் தியாகி என்று பொருள்.

ஏன் இந்தப் பழைய சரித்திரக் கண்ணோட்டம் என்ற கேள்வி எழலாம். பாகிஸ்தான் உண்டாக வேண்டும் என்று துடியாக இருந்த வங்காளி முஸ்லிம்கள் அதிக காலம் அந்த ஆர்வத்தைக் காட்டவில்லை. ஏனென்றால் பாகிஸ்தான் உருவாகும்வரை அது சொப்பன லோகமாக இருந்தது. அது உண்மையானதும் அதனுடைய நிஜ சொரூபம் வெளிப்பட்டது. இதை முதன் முதலில் உணர்ந்தவர்கள் ஐக்கிய இந்திய அரசில் உத்தியோகம் பார்த்த அதிகாரிகள். பாகிஸ்தானில் எல்லாம் பஞ்சாபி முஸ்லிம்களுக்கே என்பதை இவர்கள் உணரத் தொடங்கினார்கள். பாகிஸ்தானில் கிழக்குப் பாகிஸ்தான் அதிகாரிகளுக்கும் பஞ்சாபி முஸ்லிம்களுக்குமிடையே அந்நியோன்யம் ஏற்படவில்லை. உண்மையில் அவர்கள் ஒப்புக்கு அத்யந்த நண்பர்கள் போல் நடித்தார்கள். மாலை விருந்துகளிலும் மற்ற அரசின் கேளிக்கைகளிலும் கிழக்குப் பாகிஸ்தான் அதிகாரிகள் அந்நிய நாட்டாருடன் சரளமாகப் பழகினார்களே தவிர தங்கள் நாட்டாரான பஞ்சாபி முஸ்லிம்களின் சகவாசத்தை நாடவில்லை. பொருளாதாரப் பிரச்னைகள் தலைதூக்கியபோதெல்லாம் பாகிஸ்தான் 'இஸ்லாமுக்கு ஆபத்து' என்ற கோஷத்தைக் கிளப்பிற்று. எப்பொழுதுமே காஷ்மீர்ப் பிரச்னை இருந்து வந்துள்ளது. இந்தப் பிரச்னைப் பல்லவியை ஒரு தடவை பாடிவிட்டால் மற்றப் பிரச்னைகளுக்கும் ஓய்வு கிடைக்கும். காஷ்மீரம் என்றால் பஞ்சாபி முஸ்லிம்களுக்கும் பட்டாணியர்களுக்கும் உணர்ச்சிப் பரவசம் ஏற்படும். இதற்குக் காரணம் அவர்களுக்குக் காஷ்மீரத்தில் கொள்ளல் கொடுக்கல் இருந்தது. காஷ்மீரத்துக்கு ஆபத்து என்று குரல் எழும்பும்போதெல்லாம் கிழக்கு வங்கத்தில் எதிரொலி இருந்ததில்லை. ''கஞ்சி வரதப்பா'' என்றதும் ''எங்கே வரதப்பா'' என்று கேட்ட பிரகிருதியைப் போல் எப்படி எங்கு தங்கள் குறைகளுக்கு நிவர்த்தி ஏற்படும் என்று ஏங்கி நின்றவர்கள் அன்று கிழக்குப் பாகிஸ்தானிகளாக இருந்தவர்கள். காஷ்மீரப் பிரச்னை என்றதும் இன்றுகூடச் சில அமெரிக்கர்களுக்கு ஆவேசம் வருகிறது. ஆனால் ஜனாதிபதி கென்னடி சர்வதேச அரசியலைக் கரைத்துக் குடித்தவர். ஒரு சமயம் அவர் ஒரு பாகிஸ்தான் தூதருடன் பேசிக் கொண்டிருந்த பொழுது கிண்டல் செய்தாராம். ''நண்பரே! உமது நாடு காஷ்மீரத்தில் ஈடுபாடு கொண்டுள்ளதைவிடக் காஷ்மீரப் பிரச்னையில்

இரு இடங்களிலும்
சிறப்பாக பணியாற்ற—

# பேருதவி புரிகிறது பிரஸ்டிஜ் Prestige

உங்களைப் போன்ற பெண்கள் அலுவலகம் செல்வதால் வீட்டு வேலைகள் தடைப்படாமலிருக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் (ப்ரீத் என்பது இதன் ஏற்றுமதிப் பெயர்). ஆகவே உங்களால் இரு இடங்களிலும் சிரமமின்றி சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

நேரத்தை மிச்சப்படுத்துகிறது பிரஸ்டிஜ் (அல்லது ப்ரீத்).எப்படியெனில் எப்பொழுதையும் விட கால்பங்கு நேரத்திலேயே சமையல் தயார்!...அதுவும் பலவகைப் பதார்த்தங்களுடன்!

எரிபொருள் சிக்கனத்துடன், சமையல் அறையும் துப்புரவாக இருக்க உதவும்.பிரிஸ்டிஜ்/ப்ரீத். ஆகவே திறமையாக செயல்பட வழி செய்கிறது. பிரஸ்டிஜ் அல்லது ப்ரீத் குக்கரில் தயாரான உணவுகளில் ஊட்டச்சத்தும் மிகுந்துள்ளது.

பிரஸ்டிஜ், ப்ரீத் இரண்டுமே வாழ்நாள் பூராவும் உழைக்க உத்தரவாதமுள்ளவை. மேலும் நாடு பூராவிலும் விற்பனைக்குப் பின் பராமரிப்புச் சேவை அளிப்பதும் இது ஒன்றே. உதிரி உறுப்புகள் எங்கும் கிடைக்கின்றன.

பரிவுடன் பேருதவியளிப்பது—பிரஸ்டிஜ்/ப்ரீத்.

பிரஸ்டிஜ் ஒன்று பெறுங்கள்—வேலைக்குச் செல்லும் பெண்மணியாகவும் வீட்டைப்பேணும் தலைவியாகவும் விளங்குங்கள்.

உன் நாட்டுக்கு, ஏற்றுமதிக்கு






டி டி. பிரைவேட் லிமிடெட், பெங்களூர் 16

TTP-6175

அதிக அக்கறை கொண்டுள்ளது.'' பாகிஸ்தான் இரு சுதந்திர நாடுகளின் சமஷ்டியாக இருந்திருந்தால் பின்னர் உடைந்திருக்காது. உண்மையில் வங்கத்துச் சிங்கம் என்று பெயர் பெற்ற ஸ்ரீ ஏ. கே. பஸ்லுல்ஹக், முஸ்லிம் பெரும்பான்மையாக உள்ள மாநிலங்கள் சுயாட்சி பெறுவதுடன், சுதந்திரமும் பெற வேண்டும் என்று 1940ல் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். ஆனால் ஜமீந்தார்களும் தனவந்தர்களும் மண்டிய முஸ்லிம் லீக் இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. இருபத்தி நான்கு வருடங்கள் அவதிப்பட்டு நியாயம் கிடைக்காமல் போன கிழக்கு வங்கத்து மக்களுக்கு நியாயம் கிடைக்க ஷேக் முஜீபுர் ரஹ்மான் ஆறு அம்சக் கோரிக்கையைக் கிளப்பினார். இந்தக் கோரிக்கையைப் பாகிஸ்தானின் மௌடீக அரசு ஒப்புக் கொண்டிருந்தால் பின்னர் உண்டான ரத்தக் களறி உண்டாகி பாகிஸ்தான் சூனியாகி யிருக்காது. கல்கத்தாவில் சமூக வெறியர்கள் ஏழை எளியவர்களின் ரத்தத்தைக் குடிப்பதற்கு எந்த சுஹ்ரவர்த்தி காரணபூதராக இருந்தாரோ, அதே ஆசாமி பின்னர் பாகிஸ்தானால் உதாசீனம் செய்யப்பட்டார். ஆனால் அவர் பாகிஸ்தான் உருவாவதற்கு முன் கிழக்கு வங்காளம் என்று வங்காளத்திலிருந்து முஸ்லிம்கள் அதிகப்படியாக உள்ள பகுதியைப் பிரிப்பது முட்டாள்தனம் என்பதை உணர்ந்தார். ஐக்கிய வங்கம் என்பது தனி சுதந்திரப் பகுதியாக இருக்க வேண்டும் என்றும், பாகிஸ்தான், இந்தியா, ஐக்கிய வங்கம் ஒரு சமஷ்டிக்குள் அடங்க வேண்டும் என்றும் அவர் ஒரு திட்டத்தை அரசியல் சந்தையில் விற்க முனைந்தார். ஆனால் பாகிஸ்தான் என்ற சரக்குக்கு மெருகு ஏறியிருந்ததால் ஜனாப் சுஹ்ரவர்த்தியின் திட்டம் குறைப் பிரசவத்தில் முடிந்தது. தவிர, மேற்கு வங்க மக்கள் ஏன் இந்தியாவிலிருந்து பிரிய வேண்டும்?

ஜனத்தொகையை நோக்கினால் கிழக்குப் பாகிஸ்தானில்தான் அதிக மக்கள்; பொருளாதாரத் துறையில் அந்நியச் செலாவணியைச் சம்பாதித்துக் கொடுத்தது கிழக்குப் பாகிஸ்தான்; உத்தியோக வாய்ப்புக்களில் இளிச்சவாயர்களானது கிழக்குப் பாகிஸ்தான். இந்த நிலைமையில் கிழக்குப் பாகிஸ்தானுக்கும் மேற்குப் பாகிஸ்தானுக்கும் இடையே அரசியல் நோக்கில் சம பலம் உண்டாக்க வேண்டும் என்று மேற்கு பாகிஸ்தானிகள் செயல்பட முனைந்தார்கள். இதற்கு அர்த்தம் என்னவென்றால் பாகிஸ்தான் நாடாளுமன்றத்தில் இரு பாகிஸ்தான்களுக்கும் சமப் பிரதிநிதித்துவம் உண்டாக வேண்டும். இது ஜனநாயக முறைக்கு ஒவ்வாதது. பிரதிநிதித்துவம் என்பது மக்கள் தொகையின் அடிப்படையில் கொடுக்கப்படுவது. பலுசிஸ்தான், பஞ்சாப், ஸிந்து, வடமேற்கு மாநிலம் எல்லாம் சேர்ந்து கிழக்கு பாகிஸ்தான் ஜனத்தொகைக்கு ஈடாகவில்லை என்பது யார் குற்றம்? இருந்தும் இம் மாதிரி அபத்தத்துக்கு அடிகோலியவர்கள் மேற்குப்பாகிஸ்தானிகள். பாகிஸ்தானில் கிழக்குப் பாகிஸ்தானியர்கள் வேண்டாத விருந்தாளியைப் போல் நடத்தப்பட்டனர். இதை நன்கறிந்தவர் ஒருவர் இருந்தார். அவர்தான் வங்க தேசம் சுதந்தர நாடாவதற்கென்றே பிறந்த சிங்கம். சிறை, தடியடிக்கு அஞ்சாதவர். பலமுறை சிறைக்குச் சென்றவர் செயல்படும் நேரம் வந்துவிட்டது. (தொடரும்)

# வட்ட மேஜை

ஜனவரி 10ந் தேதி அன்று மாலை சுமார் 6 மணி அளவில் குமாரமங்கலம் என்ற கிராமத்தில் என் நண்பர் வீட்டுப் பையன் கட்டை வண்டியில் ஏறி விளையாடும்போது எதிர்பாராத விதமாக அவனது இடது கை நடுவிரல் வண்டியில் மாட்டி நசுங்கி விட்டது. மேல் தோல் முழுவதும் நீங்கி, எலும்பு வெளித் தெரிந்தது. முதலுதவி செய்யப்பட்டு மறுநாள் காலையில் பண்ருட்டி மருத்துவ மனைக்குக் கொண்டு போகப்பட்டான். அங்கு அது மிகவும் சீரியஸ் கேஸ், தையல் போடவேண்டும் என்றும் அது அங்கு சாத்தியமில்லையாதலால் உடனடியாகப் பெரிய ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லும் படியும் கூறினர். 11–1–72 செவ்வாய் காலை 11 மணிக்குக் கடலூர் பொது மருத்துவ மனைக்குப் பையனுடன் சென்றார்கள். ஆனால் அங்கு டாக்டர்கள் யாரும் இல்லை. அனைவரும் குடும்பநலத் திட்ட அறுவைச் சிகிச்சையில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள் என்று மருத்துவ மனை ஊழியர்கள் கூறினர். பையன் வலியால் துடிக்கிறான். அவர்களோ மாலை வரவும் என்றனர். பாண்டிச்சேரி சென்று அங்கு பொது மருத்துவ மனையில் காண்பித்தார்கள். உடனே சிகிச்சை நடந்தது.

கடலூர் பொது மருத்துவ மனை ஜில்லா தலைமை மருத்துவ மனையாகும். அங்கேயே அவசர கால சிகிச்சைக்குக்கூட டாக்டர் இல்லாமல் அனைவரும் குடும்ப நலத் திட்டத்தில் அவ்வளவு தீவிரமாக ஈடுபட வேண்டுமா?

புதுவை,
18–1–72 — ஆர். வாசுதேவன்

மயிலாப்பூரில் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட குறுகிய ஆமில்டன் பாலம் பழுதடைந்து, சமீபத்தில் அகலப்படுத்தப்பட்டது. தமிழகக் கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் அவர்களால் 25–11–71 அன்று திறக்கப்பட்டது. பாலத்துக்கு அருகிலேயே பஸ் 'டெர்மினஸ்' இருப்பது குறிப்பிடத்தக்கது. போக்குவரத்துக்கென்றே விரிவாக்கப்பட்ட பாலத்தில் வேலைகள் அனைத்தும் நிறைவேறியும் போக்குவரத்து நடைபெறாது இருப்பது, அங்குள்ளவர்களுக்குப் பலத்த சந்தேகத்தை ஏற்படுத்துகிறது. மக்கள் வரிப் பணத்தில் ஐந்து லட்ச ரூபாய் செலவு செய்து புதுப்பிக்கப்பட்ட இத்தகைய பெரிய பாலம், மக்களுக்குப் பயன்படாதிருப்பது வேதனை!

சென்னை — 4
2–2–72 — கருணைக் கதிரவன்

## மகிழ்ச்சிதுள்ளும் வளமான வாழ்வு கிராமங்களிலே...

[illegible]

**ராக்ஃபோர்ட்** டால்மியா சிமெண்ட்

உறுதியான எதிர்காலத்திற்கு எழுப்பப்படும் இன்றைய கட்டடம்.

டால்மியா சிமெண்ட் (பாரத்) லிட்.

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் மற்றும் தொழிற்சாலை
டால்மியாபுரம் (தமிழ்நாடு)

தலைமை அலுவலகம்: 4, சிந்தியா ஹவுஸ், புது டெல்லி 1.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்

சிமெண்ட் டிஸ்ட்ரிப்யூடர்ஸ் லிட்.

டால்மியாபுரம், (தமிழ்நாடு).



# அலை ஓசை

## 11. "என்னைக் கேட்டால்..."

ராகவன் சொன்னதற்குப் பதிலாக எதுவும் சொல்வதறகு அங்கிருந்தவர்களில் யாருக்கும் நா எழவில்லை. அவனும் பதிலுக்குக் காத்திராமல் வீட்டின் பின் கட்டை நோக்கி விடுவிடு என்று நடந்து சென்றான்.

அவன் மறைந்த பிறகு காமாட்சி அம்மான் கிட்டாவய்யரைப் பார்த்து, ''நீங்கள் ஒன்றும் யோசிக்க வேண்டாம். ராகவனை வழிக்குக் கொண்டு வருவதற்கு நான் ஆயிற்று. எல்லாவற்றுக்கும் நீங்கள் பம்பாய்க்குப் போய்விட்டுச் சீக்கிரம் திரும்பி வந்து சேருங்கள்!'' என்றான்.

ராகவன், 'நான் போய்ப் பெண்ணைப் பார்த்துக் கொள்கிறேன்!' என்று சொன்னது கிட்டாவய்யருக்கு மிக்க சந்தோஷம் அளித்தது. பெண்ணை மாப்பிள்ளைக்குக் காட்டுவதற்காகப் பட்டணம் அழைத்துக் கொண்டு வரும் காரியம் அவருக்குப் பிடிக்கவேயில்லை. 'அது தம்முடைய கௌரவத்துக்குக் குறைவு என்று கருதினார். அதோடு தம் அருமைப் புதல்வியை அம்மாதிரி சந்தைக்கு

அமரர் கல்கி



அழைத்துக் கொண்டு போவதுபோல அழைத்துப் போய், யாரோ முன்பின் தெரியாத பையன் அவளைப் பார்த்து, 'வேண்டும்' 'வேண்டாம்' என்று சொல்ல இடங் கொடுக்கும் விஷயம் அவர் மனத்துக்குப் பெரிதும் கஷ்டம் தந்திருந்தது. ஆகவே, இப்போது ராகவன், 'நானே அவர்கள் ஊருக்குப் போய்ப் பெண்ணைப் பார்க்கிறேன்' என்று சொன்னதை நினைத்துக் களிப் படைந்தார்.

காமாட்சி அம்மாள் கூறியதற்குப் பதிலாக, உற்சாகமான குரலில், ''ஆகட்டும்; பம்பாய்க்குப் போய்விட்டுக் கூடிய சீக்கிரம் திரும்பி விடுகிறேன். சௌகரியப்பட்டால் மாப்பிள்ளை என் பின்னோடேயே வரலாம்; நானே அழைத்துப் போகிறேன்!'' என்றார்.

''அதற்குள்ளாகவே மாப்பிள்ளை உறவு கொண்டாட ஆரம்பித்துவிட்டாயா, கிட்டா? ஓஹோஹோ!'' என்றார் சுப்பய்யர்.

''அதற்கென்ன? ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் அருள் இருந்தால் அவ்விதமே நடந்து விடுகிறது. இவர் என்னைக் கூப்பிட்ட சமயம் நான் பூஜை அறையில் படங்களுக்கு அலங்காரம் செய்து கொண்டிருந்தேன். இவர், 'காமாட்சி' என்று என்னைக் கூப்பிட்ட போது ஸ்ரீ ராம பட்டாபிஷேக படத்துக்குச் சாத்தியிருந்த பூமாலையிலேயிருந்து ஒரு செண்பகப் புஷ்பம் உதிர்ந்தது. நல்ல சகுனம் என்று நினைத்துக் கொண்டேன்'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''அப்படியானால், இந்தக் கல்யாணம் நடந்த மாதிரியேதான்! சுப்பய்யரே, இவ்வளவு நாளாக ராகவனுக்குப் பெண் கொடுக்கிறேன் என்று எத்தனை பேர் இந்த வீட்டைத் தேடி வந்திருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்? குறைந்தபட்சம் ஆயிரம் பேர் இருக்கும். அவ்வளவு பேரையும் தட்டிக் கழித்து வந்தவள் இந்த மகராஜிதான். எப்போது இவனுடைய வாயினாலேயே 'இந்தக் கல்யாணம் நடக்கும்' என்று சொல்லிவிட்டானோ, அப்போது கட்டாயம் கல்யாணம் நடந்தே தீரும்'' என்றார் சாஸ்திரிகள்.

''எல்லாம் ஒரு நல்லதற்காகத்தான் இருக்கும்! பரஸ்பரம் இவ்வளவு நல்ல சம்பந்தம் வாய்க்க வேண்டும் என்று பிராப்தம் இருக்கிறபோது, வேறு இடத்தில் கல்யாணம் எப்படி நிச்சயமாகும்? கிட்டாகூடத்தான் போன வருஷமெல்



லாம் நூறு வரன் பார்த்தான். ஒன்றும் மனத்துக்குத் திருப்திகரமாயில்லை என்று தள்ளி விட்டான். இந்த வீட்டுக்குள் கால் வைத்ததும் எப்படியோ கிட்டாவின் மனத்துக்குப் பிடித்துவிட்டது. தங்களிடம் ஏதோ ஒரு சக்தி இருக்க வேண்டும், சாஸ்திரிகளே! நம்ப அம்மாளிடத்திலும் அப்படியே ஒரு தெய்வீகம் இருக்கிறது.''

''ஓய் சுப்பய்யரே! பலே பேர்வழியாயிருக்கிறீரே! இப்படியெல்லாம் முகஸ்துதி செய்து என்ன காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று உத்தேசம்? அம்மாளிடம் ஏதாவது இன்ஷூரன்ஸுக்கு அடி போட்டிருக்கிறீரோ?'' என்று சாஸ்திரிகள் ஆரம்பித்ததும் சுப்பய்யர் பயந்து போனார். பேச்சின் நடுவில் குறுக்கிட்டு, ''தயவுசெய்து மன்னிக்க வேண்டும். எனக்கு ஆபீசுக்கு நேரமாகி விட்டது. இப்போது நாங்கள் போய் வருகிறோம்; இனிமேலேதான் அடிக்கடி சந்திக்க வேண்டியதாயிருக்குமே?'' என்று சொல்லிக் கொண்டே சுப்பய்யர் எழுந்ததும், கிட்டாவய்யரும் எழுந்தார்.

அவர்களை வீட்டு வாசல் வரையில் கொண்டு போய் விடுவதற்காகச் சாஸ்திரிகளும் எழுந்தார்.

அந்தச் சமயத்தில் காந்தி குல்லா தரித்திருந்த காங்கிரஸ் தொண்டர்கள் நாலு பேர் திடுதிடுவென்று வீட்டுக்கு உள்ளே நுழைந்து வந்தார்கள்.

''யார் நீங்கள்?'' என்று சாஸ்திரிகள் திடுக்கிட்டுக் கேட்டார்.

''ஸார்! பீஹார் பூகம்ப நிதிக்காகப் பணம் வசூலிக்கிறோம். தங்களால் இயன்றதைக் 'கொடுக்க வேண்டும்'' என்று அந்தத் தொண்டர்களிலே ஒருவர் கூறினார்.

சாஸ்திரிகள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, ''பீஹாராவது, பூகம்பமாவது? அதெல்லாம் இங்கு ஒன்றும் கொடுப்பதற்கில்லை!'' என்று கண்டிப்பாகக் கூறினார்.



''இதென்ன! பேப்பரைக் கூடப் பார்க்காமல் காலையில் தூங்கி யெழுந்ததும் எங்கே ஓடுகிறீர்கள்?''

''டாக்டர் மு. க.வின் புதிய போஸில் இன்றைய புது போஸ்டரைப் பார்க்க!''

''அப்படிக் கண்டிப்பாகச் சொல்லக் கூடாது! லட்சக் கணக்கான ஜனங்கள் வீடு இழந்து ''வாசல் இழந்து சொத்து இழந்து......''

''உயிரையே இழந்து தவிக்கிறார்கள்! எல்லாம் தெரியும், அப்பா! என்னை நிரட்சரகுட்சி என்பதாக நினைத்துக் கொண்டு பேசுகிறாயோ? பூகம்பத்துக்கு மறுநாளே நான் பாபு ராஜேந்திர பிரஸாதுக்குத் தந்தி மணியார்டரில் என்னுடைய நன்கொடையை அனுப்பிவிட்டேன்! நீங்கள் போய் வேறு யாராவது நாலு பேரைப் பாருங்கள்! வீண் பொழுது போக்கவேண்டாம்!'' என்றார் சாஸ்திரிகள்.

''நாலு பேரைப் பார்ப்பதற்கு நீங்கள் சொல்ல வேண்டுமாக்கும்?'' என்று முணுமுணுத்துக் கொண்டே தொண்டர்கள் சென்றார்கள்.

''பார்த்தீர்கள் அல்லவா? ஒரு நிமிஷம் கதவைத் திறந்து வைத்தால் போதும்! பூகம்பம், எரிமலை, புயற்காற்று, காங்கிரஸ், கான்பரன்ஸ் என்று சொல்லிக் கொண்டு யாராவது யாசகம் கேட்க வந்து விடுகிறார்கள். இல்லாவிட்டால் அங்கே உற்சவம், இங்கே பஜனை என்று கையில் சந்தாப் புத்தகத்துடன் வந்து விடுகிறார்கள். கொடுத்துக் கொடுத்து எனக்கும் சலித்துப் போய் விட்டது. மேலும் நான் என்ன பண்ணையாரா? ஜமீன்தாரா? நன்செய் நிலம் பொன்னாக விளைகிறதா! ஏதோ வெள்ளைக்கார கவர்ன்மெண்டின் புண்ணியத்திலே மாதம் பிறந்ததும் பென்ஷன் வந்து கொண்டிருக்கிறது. இந்தப் புண்ணியவான்கள் சுயராஜ்யம் சம்பாதித்து விட்டால், நம்ப பென்ஷன் வாயிலே மண் விழுந்துவிடும்! கராச்சி காங்கிரஸிலே மாதம் ஐந்நூறு ரூபாய்க்கு மேலே யாருக்கும் சம்பளமே கூடாது என்று தீர்மானம் செய்திருக்கிறார்களாம்! தெரியுமோ, இல்லையோ? அப்படியே நாம் இந்தத் தொண்டர்களிடம் ஏதாவது பணம் கொடுக்கிறோமென்று வைத்துக் கொள்ளுங்கள். கொடுத்த பணம் பீஹார் நிதிக்கு

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத்.

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது.

71/119

நேரே போய்ச் சேருகிறதென்று நிச்சயம் உண்டா? என்னைக் கேட்டால் பூகம்பம் போன்ற விஷயங்களில் மனிதன் தலையிடவே கூடாது என்று சொல்வேன். பகவானே பார்த்துச் செய்திருக்கிற காரியத்தில் கண்டைக்காய் மனிதன் தலையிட்டு என்ன செய்துவிட முடியும் ஸார்.....''

இவ்விதம் பேசிக் கொண்டே பத்மலோசன சாஸ்திரிகள் கிட்டாவய்யரையும் சுப்பய்யரையும் அழைத்துக் கொண்டு வாசற் பக்கம் போனார். அவர்கள் வீட்டைவிட்டு இறங்கிய உடனே கதவைச் சாத்திப் பலமாகத் தாளிட்டு விட்டுத் திரும்பினார்.

## 12. கராச்சியில் நடந்தது

'தேவி ஸதன'த்தின் பின்கட்டில் ஒருபுறத்தில் சமையல் அறையும் அதற்கு நேர் எதிர்ப்புறத்தில், காமாட்சி அம்மாளின் பூஜை அறையும் இரண்டுக்கும் மத்தியில் விசாலமான கூடமும் இருந்தன. கூடத்தின் நடுவில் ஊஞ்சல் போட்டிருந்தது. ராகவன் பின்கட்டுக்கு வந்து ஊஞ்சலில் உட்கார்ந்து தர்யாரின் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். அவனுடைய கால்கள் கீழே தரையைத் தொட்டதும், இலேசாக ஊஞ்சல் ஆடியது. ஊஞ்சலுடன் அவனுடைய உள்ளமும் ஊசலாடியது.

கடலில் முழுகிச் சாகப் போகிறவனுக்கு அவனுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் ஒரு நிமிஷத்தில் வெள்ளித் திரையில் தோன்றுவதுபோல் மனக் கண் முன்னால் தோன்றி மறையும் என்று சொல்லுவார்கள். அம்மாதிரி இச்சமயம் ராகவனுடைய மனக் கண் முன்னால் சிற்சில சம்பவங்கள் அதிவேகமாகத் தோன்றின. காரிருள் சூழ்ந்திருக்கும் வேளையில் மின்னல் வெளிச்சத்தில் தோன்றி மறையும் சம்பவங்களைப் போல் அச்சம்பவங்கள் தோன்றி மறைந்தன.

புது டில்லியில் பொக்லெஷ் இலாகாவின் தலைமை உத்தியோகஸ்தரைப் பார்த்துவிட்டு ராகவன் ஊருக்குத் திரும்ப எண்ணியபோது கராச்சி வழியாகப் போவது என்று தீர்மானித்தான். கராச்சியில் அந்த வருஷம் காங்கிரஸ் மகாசபை கூடியது. அநேகமாக இந்திய இளைஞர்கள் எல்லாரையும் போல் ராகவன் கலாசாலை மாணக்கனாயிருந்தபோது தேசிய சுதந்திரத்தில் ஆவேசம் கொண்டிருந்தான், அதோடு சமூக சீர்திருத்தப் பற்றும் கொண்டிருந்தான். மேலும் இந்தியா தேசத்திலிருந்து சாதி சமய வேற்றுமைகளையெல்லாம் ஒழித்தால்தான் இந்தியாவுக்குக் கதிமோட்சம் என்ற உறுதி அவனுக்கு ஏற்பட்டிருந்தது.

ஆகையால், புதுதில்லிக்குப் போன காரியம் ஆனபிறகு கராச்சிக்குச் சென்று காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் பார்வையாளனாக ஆஜராகி நடவடிக்கைகளைக் கவனித்தான். அப்படிக் கவனித்ததினால் அவனுக்கு நம் தேசியத் தலைவர்களைப் பற்றிய விஷயத்தில் மதிப்பு அதிகமாகவில்லை. ''உலகம் எவ்வளவு முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்கிறது? அமெரிக்க நாட்டில் போர்டு மோட்டார் தொழிற்சாலையில் நிமிஷத்துக்கு முந்நூறு மோட்டார்கள் உற்பத்தியாகின்றன! இப்பேர்ப்பட்ட இயந்திர யுகத்தில் இவர்கள் கைராட்டையைக் கட்டிக் கொண்டு அழுகிறார்களே! மணிக்கு முந்நூறு கஜம் நூல் நூற்பதாமே! கடவுளே! இப்படிப்பட்ட தலைவர்களால் இந்தியா எந்தக் காலத்தில் முன்னேறப் போகிறது?'' என்று எண்ணி அலுப்படைந்தான்.

பிறகு இயந்திர யுகத்துக்கு அறிகுறியாக அந்த நாளில் கருதப்பட்ட ஆகாச விமானம் பார்க்கச் சென்றான். அப்போது கராச்சியில் புதிதாக ஆகாச விமானக் கூடம் கட்டியிருந்தார்கள். வாடகை விமானங்கள் வந்திருந்தன. ஐந்து ரூபாய் கொடுத்தால் ஆகாச விமானத்தில் ஐந்து நிமிஷப் பிரயாணம் செய்யலாம். விமானம் ஆகாசத்தில் இரண்டாயிரம் அடி உயரம் விர்ரென்று ஏறிக் கராச்சி நகரைச் சுற்றி ஒரு தடவை வட்டமிட்டுவிட்டு மறுபடியும் கீழே வந்து இறங்கும்.

விமான கூடத்துக்குப் போனபோது ராகவன் விமானத்தில் ஏறுவது என்னும் நிச்சயத்தோடு போகவில்லை. ஏதோ பார்க்கலாம் என்று போனான். அங்கே போனபிறகு கட்டாயம் ஏறியாக வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஏனெனில், ஆகாச விமானம் ஏறுவதையும் இறங்குவதையும் வேடிக்கை பார்ப்பதற்காக ஜனங்கள் நின்று கொண்டிருந்த இடத்தில் ராகவனுக்குப் பக்கத்தில் மூன்று வடநாட்டு ஸ்திரீகள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களிலே ஒரு ஸ்திரீ கொஞ்சம் வயதானவள். மற்ற இருவரும் இளம் பெண்கள். ஒருத்தி

கட்டையாயும் குட்டையாயும் மாநிற மாயும் இருந்தாள். அவளை இலட்சண மானவள் என்று சொல்ல முடியாது. இன்னொரு பெண்... ஆகா... அவளை வர்ணிப்பது சாத்தியமில்லை. கார்த்திகை மாதத்துப் பூரண சந்திரனுடைய சந்தன நிறக் கிரணங்கள் ஒரு மந்திரவாதியினுடைய மந்திரத்தினால் பெண் உருக் கொண்டது போலத் தோன்றினாள். பனிக் காலத்துக் காலை நேரத்தில் புல் நுனியில் நிற்கும் முத்துப் பனித் துளிகள் காலைச் சூரிய கிரணங்களினால் ஒளி பெற்றுத் திகழ்வதுபோல் அவளுடைய கண் விழிகள் பிரகாசித்தன. பால கோபாலன் அன்னை யசோதையிடம் வெண்ணெய் கேட்பதற்காகத் தவழ்ந்து செல்லும்போது அவனுடைய அரையில் கட்டியிருந்த கிண்கிணிகள் ஒலிப்பதுபோல் அந்தப் பெண்ணின் குரல் ஒலித்தது.

அத்தகைய போதை தரும் இன்பக் குரலில் அப்பெண், ''நீங்கள் மதராஸ் காரரா?'' என்று ஆங்கில பாஷையில் கேட்டபோது, ராகவன் மிக ரஸித்த ஷெல்லி-கீட்ஸ் கவிதைகளைக் காட்டிலும் இனிமை வாய்ந்த கவிதையாக அந்த வார்த்தைகள் அவன் செவியில் தொனித்தன. தன்னைத்தான் அப்பெண் கேட்கிறாள் என்பதை ராகவன் உணர்ந்து நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு ஒரு நிமிஷம் ஆயிற்று. அதற்கு அவன் பதில் சொல்லியபிறகு, ''நீங்கள் விமானத்தில் ஏறிப் பார்க்கப் போகிறீர்களா?'' என்று அப்பெண் கேட்டாள். ''ஆம்; அதற்காகத்தான் வந்திருக்கிறேன்!'' என்று ராகவன் பளிச் சென்று பதில் சொல்லி, ''நீங்களும் விமானம் ஏறுவதற்காக வந்தீர்களா?'' என்று கேட்டான். ''நீங்கள் முதலில் ஏறிப் போய்விட்டு வந்து எப்படி இருந்தது என்று சொல்லுங்கள்!'' என்றாள் அந்தப் பெண்.

அவள் பக்கத்திலே இருந்த இன்னொரு பெண் அவள் காதில் ஏதோ முணுமுணுக்கவே இருவரும் கலகல வென்று சிரித்தார்கள். அவ்விதம் கலந்தெழுந்த சிரிப்பில் ராகவனுடன் பேசிய பெண்ணின் சிரிப்பொலி மட்டும் தனிப்படப் பிரிந்து ராகவன் காதில் விழுந்து அவனைப் பரவசப்படுத்தியது. அந்த இரு பெண்களுக்குமிடையே தோற்றத்திலும், மேனி நிறத்திலும், குரலிலும் எத்தனை வித்தியாசம் என்று ராகவன் எண்ணி எண்ணி வியந்தான். அவர்களுடைய சம்பாஷணையிலிருந்து இருவரில் அழகியின் பெயர் தாரிணி என்றும் இன்னொருத்தியின் பெயர் நிருபமா என்றும் தெரிந்துகொண்டான். மற்றும் அவர்கள் கராச்சி காங்கிரஸில் ஸ்திரீ தொண்டர் படையில் சேர்ந்து சேவை செய்வதற்கு வந்தவர்கள் என்றும், காங்கிரஸ் கூட்டம் முடிந்த பிறகு தன்னைப் போலவே அவர்களும் ஊர் சுற்றிப் பார்க்கிறார்கள் என்றும் அறிந்தான்.

ராகவன் ஆகாச விமானத்தில் ஏறி வானத்தில் வட்டமிட்ட போதெல்லாம் அவனுடைய நினைவு மட்டும் பூமியிலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தது. சரியாகச் சொல்வதாயிருந்தால், கீழே பூமியில் நின்ற தாரிணியைச் சுற்றிச் சுற்றி அவன் மனம் வட்டமிட்டுக் கொண்டிருந்தது என்று சொல்ல வேண்டும்.

விமானம் இறங்கியதும் ராகவனுடைய கண்கள் அந்த மூன்று பெண்களும் நின்ற இடத்தைத் தேடின. ஒரு கணம் அவர்கள் அங்கு காணப்படாதிருக்கவே அவனுக்கு உலகமே இருண்டு விட்டதாகத் தோன்றியது. சற்றுத் தூரத்தில் இன்னொரு இடத்தில் அவர்கள் நிற்பதைப் பார்த்தவுடன் உலகில் மறுபடியும் சூரியன் பிரகாசித்தது. ராகவன் அந்த இடத்தை நோக்கி விரைந்து சென்றான். தாரிணி ஆவல் ததும்பிய முகத்துடனே அவனைப் பார்த்து, ''எப்படி இருந்தது?'' என்று கேட்டாள். ராகவன் தன்னுடைய மனம் பூமியில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது என்னும் உண்மையைச் சொல்லாமல் வானப் பிரயாணத்தின் சுகங்களைப் பற்றி 'அற்புத ரசம்' தோன்ற வர்ணித்தான். ''நீங்களும் ஏறப் போகிறீர்கள் அல்லவா?'' என்று கேட்டான். தாரிணி ஏமாற்றம் தொனித்த குரலில், ''இல்லை; இவர்கள் இருவரும் பயப்படுகிறார்கள். என்னையும் போகக் கூடாது என்கிறார்கள்!'' என்றாள்.

''பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஸீட்டுகள் அதிகம் உள்ள விமானமாயிருந்தால் நானே உங்களை அழைத்துப் போவேன். ஆனால் இந்த விமானத்தில் ஒரே ஸீட்டுதான் இருக்கிறது. விமானியைத் தவிர ஒருவர்தான் ஏறலாம்!'' என்று ராகவனும் ஏமாற்றமான குரலில் கூறினான்.

''சரி; இனிமேலாவது நாம் போகலாமல்லவா?'' என்று மற்றொரு பெண் கேட்க, தாரிணி ராகவனைப் பார்த்து ''நாங்கள் போக வேண்டும்!'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள். சற்றுத் தூரத்தில் உள்ள டாக்ஸி காரில் அவர்கள் ஏறும்போது, தான் நின்ற திசையைத் தாரிணி பார்த்ததாக ராகவ



பம்பாய், ஜூலை 27—

ஸிந்தி தால்வாய் என்னும் ஒரு பேரைக் கொண்ட ராமன் ராகவ், சித்தம் சுவாதீனமில்லாதவன் ஆதலால் தன் சார்பில் வழக்குரைக்க இயலாதவன் என்று பம்பாய் உயர்நீதி மன்றம் வழங்கிய தீர்ப்பை எதிர்த்து மகாராஷ்டிர அரசு சுப்ரீம் கோர்ட்டுக்கு வழக்கைக் கொண்டு சென்றிருக்கிறது.

1967 — 69 கால கட்டத்தில் ராமன் ராகவ் குறைந்தபட்சம் ஒன்பது கொலைகளாவது புரிந்திருக்க வேண்டும் என்று அவன் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. மேலும் 1956 முதல் 1969 வரை பதினாறு வருடங்களில் அவன் மொத்தம் நாற்பத்திரண்டு கொலைகள் புரிந்திருக்கலாம் என்று கருதப்படுகிறது.

செஷன்ஸ் கோர்ட் ராமன் ராகவ்வுக்குத் தூக்குத் தண்டனை விதித்தது. இதை உறுதிப்படுத்த ஹைகோர்ட்டில் வழக்கு நடந்தபோது ராமன் ராகவ் சார்பாக வழக்காடிய வக்கீல், அவன் சித்த சுவாதீனம் இல்லாதவன் என்றும் அதனால் தன் சார்பில் வழக்குரைக்க இயலாதவன் என்றும் சாட்சியங்கள் வழங்கினார். இதை ஏற்று ஹைகோர்ட், மரண தண்டனையை உறுதிப்படுத்தும் நடவடிக்கையை ஒத்திப் போட்டது.

இவ்வாறு ஹைகோர்ட் செய்த முடிவை எதிர்த்தே தற்போது மகாராஷ்டிர அரசு வழக்கை சுப்ரீம் கோர்ட்டுக்கு எடுத்துச் சென்றிருக்கிறது.

1971, ஜூலை 28ந் தேதி 'ஹிந்து' பத்திரிகையில் வெளியான செய்தி

# கி.ராஜேந்திரன்

எழுதும்

# "ஜக்கோ ஸாரநாதன்"



தொடர்கதை

## கல்கி

5.3.1972 இதழில் ஆரம்பம்




வத்தலக்குண்டு தன் மகாமேதைப் புதல்வனுன பி. ஆர். ராஜம் அய்யரின் நூறாவது ஜன்மதின ஜயந்தியைச் சென்ற 30-1-72ல் வெகு சிறப்பாகக் கொண்டாடியது. ஊரே விழாக்கோலம் பூண்டிருந்தது. கருத்தரங்கு முடியவும் ராஜம் அய்யர் சிறு வயதில் வளர்ந்த வீட்டிலிருந்து அவரது உருவப் படத்துடன் ஊர்வலம் புறப்பட்டது. ராஜம் அய்யர் பிறந்த வீடும் அவர் வளர்ந்த வீடும் ஒற்றைத் தெருவிலேயே இருக்கின்றன. அவ்வீடுகளின் முகப்பில் பி. ஆர். ராஜம் அய்யர் வளர்ந்த வீடு என்றும் பிறந்த வீடு என்றும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுச் சுவரில் பதிக்கப்பட்டிருந்த சலவைக் கற்களைத் திரு மு. வ.வும் திரு தெ. பொ. மீ.யும் திறந்து வைத்தனர். ராஜாஜி மைதானத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசிய வத்தலக்குண்டு விழாக் குழுத் தலைவர் திரு டி. வி. ஆர். வி. ராதாகிருஷ்ணன் செட்டியார், ராஜம் அய்யருக்குத் தக்கதொரு நினைவுச்சின்னம் இரண்டு லட்ச ரூபாய் செலவில் ஒரு நினைவு மண்டபமாக வத்தலக்குண்டில் எழுப்ப உத்தேசித்திருப்பதாகவும் அதற்கு எல்லோரும் உதவியும் ஆதரவும் தரும்படியும் கேட்டுக் கொண்டார். தினமணி ஆசிரியர் திரு ஏ. என். சிவராமன் பேசுகையில், ராஜம் அய்யர் பிறந்து வாழ்ந்த அந்த ஒற்றைத் தெரு இனி ராஜம் அய்யர் தெரு என்று அழைக்கப்பட வேண்டும் என்றபோது பலத்த கரகோஷத்துடன் கூட்டம் அந்த யோசனையை வரவேற்றது.



னுக்குப் பிரமை உண்டாயிற்று! பிரமை என்று ஏன் கருத வேண்டும்? உண்மையாகவே இருக்கலாமல்லவா?

ஆகாச விமானம் ஏறிய அநுபவத்துக்குப் பிறகு ராகவன் கப்பல் பிரயாண அநுபவத்தையும் பெறுவதற்கு விரும்பினன். கராச்சி காங்கிரஸுக்கு வந்திருந்தவர்களிலே பலர் கடல் மார்க்கமாக பம்பாய்க்குச் சென்றார்கள். ராகவனும் ஸிந்தியா கம்பெனிக்குச் சொந்தமான கப்பல் ஒன்றுக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு ஏறினன். அந்தக் கப்பல் கடலோரமாக மட்டும் ஓட்டுவதற்குரிய சிறிய கப்பல். அதில் மூட்டை முடிச்சுகள், பெட்டி படுக்கைகள், உணவுக் கூடைகள் ஆகியவற்றுடன் கச கசவென்று ஜனங்கள் நெருங்கி நிறைந்திருந்தார்கள். அந்த வடக்கத்தி ஜனங்களின் அழுக்குத் துணிகளையும், ஆபாச வழக்கங்களையும் 'ஆ ஒ' என்ற கூச்சல்களையும் ராகவன் பார்த்துவிட்டு, 'கடவுளே! இதில் எப்படி முப்பத்தெட்டு மணி நேரம் போக்குவது?' என்பதாக எரிச்சல் அடைந்தான். ஆனல் கப்பல் புறப்படும் சமயத்தில் அவசரமாகப் படகில் வந்து ஏணியில் ஏறிக் கப்பலில் இறங்கிய மூன்று ஸ்திரீகளைக் கண்டதும் ராகவனுடைய மனேபாவம் அடியோடு மாறி விட்டது. அந்த ஆபாசமான அழுக்கு நிறைந்த பழைய ஓட்டைக் கப்பல் தட்சணமே கந்தர்வ பூமியாக மாறிவிட்டது. ராகவனைக் கப்பலில் பார்த்ததும் தாரிணிக்கும் ஒரே ஆச்சரியமாய்ப் போய்விட்டதென்று அவளுடைய முக பாவத்திலிருந்து தெரியவந்தது. அந்த ஆச்சரியத்திலே சந்தோஷம் கலந்திருந்தது என்பது ராகவனுடைய பார்வைக்குத் தெரியாமல் போகவில்லை.

ராகவன் வடநாட்டுக்கு யாத்திரை வந்தது அதுதான் முதல் தடவை. தாரிணியோ பம்பாய்வாசி. எனவே வடநாட்டைப் பற்றியும் வடநாட்டு மக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றியும் தாரிணியிடம் ராகவன் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கு எத்தனையோ விஷயங்கள் இருந்தன. தாரிணியும் சென்னை மாகாணத்தைப் பற்றிப் பல விஷயங்கள் ராகவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினள். ஆனல் பேசுவதற்கு விஷயங்கள் அவர்களுக்கு அவ்வளவு அவசியமாகத் தேவையில்லைதான்! அருகில் இருந்து ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தாலே போதுமென்ற மனேநிலையில் அவர்கள் இருந்தார்கள். ஆனல் கப்பலில் எல்லாப் பக்கங்களிலேயும் நெருங்கியிருந்த மற்றவர்களுடைய கவனத்தைக் கவராதிருக்கும் பொருட்டு அவர்கள் ஏதோ பேசுவது போலப் பாசாங்கு செய்ய வேண்டியிருந்தது. இத்தகைய சம்பாஷணைப் பாசாங்குகளின்போது தாரிணிக்குத் தமிழ் பேசத் தெரியும் என்பதை அறிந்து ராகவன் அளவற்ற வியப்பும் களிப்பும் அடைந்தான்.

கப்பலில் தாரிணியையும் அவளுடைய தோழியையும் போல் இன்னும் சில தேச சேவிகைகளும் இருந்தார்கள். தாரிணியின் அழகை எடுத்துக் காட்டுவதற்காகவே அவள் பக்கத்தில் இருந்தால் போலத் தோன்றிய நிருபமாவுக்குத் தேக சௌந்தரியம் இல்லாவிட்டாலும் இனிமையான குரல் இருந்தது.

அவனுடைய தலைமையில் மற்ற தேச சேவிகைகளும் சேர்ந்து ஹிந்தி தேசிய கீதங்களைப் பாடினார்கள். அப்போது மிகப் பிரபலமாயிருந்த ''ஜண்டா ஊஞ்சா ரஹே ஹமாரா!'' என்ற தேசியக் கொடி கீதத்தைப் பாடினார்கள். பிரபல உருது கவியான ஸர் முகம்மது இக்பால் பாடிய ''ஸாரே ஜஹா(ன்)ஸே அச்சா ஹிந்துஸ்தான் ஹமாரா!'' என்னும் தேசிய கீதத்தையும் பாடினார்கள். இந்தக் கீதங்கள் எல்லாம் தெய்வ லோகத்தில் கந்தர்வ கன்னிகைகள் பாடும் கீதங்களாகவே ராகவனுக்குத் தோன்றின. இரண்டாவது கீதத்தின் பொருளைத் தாரிணியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான். முதல் அடியின் பொருள், ''உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களிலும் நம்முடைய ஹிந்துஸ்தானம் சிறந்தது'' என்று அறிந்ததும், ''சந்தேகம் என்ன? உன்னைப் போன்ற பெண்கள் இந்த நாட்டில் பிறந்திருக்கும்போது உலகில் வேறு எந்த தேசம் இந்தியாவுக்கு இணையாக முடியும்?'' என்று சொன்னான். அதைக் கேட்டுத் தாரிணி கன்னங்கள் குழியப் புன்னகை செய்த தோற்றம் ராகவன் மனக் கண் முன் இன்றைக்கும் அழியா வர்ணத்தில் தீட்டிய அஜந்தா சித்திரத்தைப்போல் நின்றது.

இவையெல்லாம் நடந்து இப்போது ஏறக்குறைய மூன்று வருஷங்கள் ஆகின்றன. இதற்கிடையில் தாரிணிக்கும் ராகவனுக்கும் அடிக்கடி கடிதம் போய் வந்து கொண்டிருந்தது. அவை காளிதாசனும் கம்பரும் தாகூரும் பாரதியும் பெருமைப் படும்படியான கவிதை உணர்ச்சி ததும்பிய கடிதங்கள். கடிதங்கள் எழுதுவதோடு அவர்கள் நின்றுவிட வில்லை. ராகவன் ஒரு முறை பம்பாய்க்குப் போயிருந்தான். தாரிணி அவனை எலிபெண்டா தீவுக்கு அழைத்துக் கொண்டு சென்று அங்குள்ள குகைச் சிற்ப அற்புதங்களையெல்லாம் காட்டினாள். பிறகு தாரிணி டில்லிக்குப் போனாள். புது டில்லியில் உத்தியோகம் பார்த்த ராகவன் டில்லி மாநகரின் பழைய கோட்டை கொத்தளங்கள், பிரும்மாண்டமான மசூதிகள், மொகலாய மன்னர்களின் ஒப்பற்ற அழகு வாய்ந்த பளிங்குக் கல் அரண்மனைகள் ஆகியவற்றுக்கெல்லாம் தாரிணியை அழைத்துப் போய்க் காட்டினான். அப்போதெல்லாம் அவர்கள் கேவலம் இந்த மண்ணுலகின் கடினமான கட்டாந் தரையில் காலால் நடக்கவில்லை. கற்பனை உலகத்தில் ஆனந்த சாகரத்தின் அலைகளின் மேலாக மிதந்து கொண்டே சென்றார்கள்.

அப்புறம் ஆக்ராவில் உள்ள உலக அற்புதங்களில் ஒன்றான தாஜ்மகாலுக்குப் போவது பற்றி இருவரும் யோசித்தார்கள். அதைச் சில காலம் தள்ளிப் போடலாம் என்று தீர்மானித்துக் கொண்டார்கள். யார் என்ன நினைப்பார்களோ, என்ன சொல்வார்களோ என்ற பயத்துக்கு இடமில்லாமல் இருவரும் தம்பதிகளாய்க் கை கோத்துக் கொண்டு போய் ஷாஜஹானின் ஒப்பற்ற காதற் கனவைப் பார்த்து வர வேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

சுருங்கச் சொன்னால் இந்த மூன்று வருஷ காலமும் ராகவனுடைய வாழ்க்கையில் கிருத யுகமாக இருந்தது. ஒருபுறம் அவன் உத்தியோக ஏணியில் படிப் படியாக ஏறிக் கொண்டிருந்தான். அவனுடைய இலாகாத் தலைவரான பெரிய துரை அவனைத் தம்முடன் சீமைக்கு அழைத்துப் போவதாகச் சொல்லியிருந்தார். மற்றொரு புறத்தில் ராகவன் காதல் மயமான கற்பனைக் கனவு உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். இந்த நாட்களில் அவன் எந்தப் பக்கம் பார்த்தாலும் தங்க ரேகைகள் படர்ந்திருக்கக் கண்டான். இடைவிடாமல் அவனுடைய செவிகளில் தேவ லோகத்து மதுர வீணா கானம் பாய்ந்து கொண்டிருந்ததை உணர்ந்தான். பழைய டில்லி நகரத்தின் குப்பையும் கூளமும் துர்நாற்றமும் நிறைந்த குறுகிய வீதிகளில் அவன் நடந்தபோதுகூட மொகலாய மன்னர்கள் உபயோகித்த ஒப்பற்ற அத்தரின் வாசனையையும் அந்த மன்னர்களின் அந்தப்புர நாரீமணிகள் குளித்த பன்னீரின் நறுமணத்தையும் கற்பனை உணர்ச்சியால் முகர்ந்து அனுபவித்துக் கொண்டிருந்தான்.

ஆகா! அந்த இன்பத்துக்கெல்லாம் இப்போது முடிவு வந்து விட்டதா? எப்படி வந்தது? எதனால் வந்தது? நம்பவே முடியவில்லையே?

வந்திருந்தவர்கள் விடைபெற்றுச் சென்ற பிறகு காமாட்சி அம்மாள் பின்கட்டுக்கு வந்தாள். கவலை தோய்ந்த முகத்துடன் ராகவன் ஊஞ்சலில் உட்கார்ந்து லேசாக ஆடிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். ஊஞ்சலுக்கு எதிரே சுவர் ஓரமாகக் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தாள். தன்னுடைய வருகையை எதிர்பார்த்துத் தன் மகன் அங்கே காத்துக் கொண்டிருக்கிறான் என்பது காமாட்சி அம்மாளின் உள் மனத்துக்கு முன்னமே தெரிந்திருந்தது. (தொடரும்)



ம்...என்ன தயக்கம்? கிண்ணத்தையும் கத்தியையும் எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு சொட்டு ரத்தமும் கீழே சிந்தக் கூடாது.
ஐயோ, புவனா! உன்னை நானே எப்படிக் கொல்லுவேன்?




புவனாவின் வற்புறுத்தலுக்குப் பிறகு பார்த்திபன் அவள் சொன்னபடியே செய்தான்.




ரத்தம் முழுவதும் கிண்ணத்தில் வழிந்த பின், உடலைக் கடலில் வீசி எறியும்படி கூறி இருந்தாள் புவனா. அப்படியே செய்தான் பார்த்திபன்.




புவனாவின் புறா உடல் கடலில் விழுந்த சில விநாடிகளில், அற்புதம் நிகழ்ந்தது.
விந்தையிலும் விந்தை! அதோ புவனா கடலிலிருந்து உயிருடன் வருகிறாளே. அவள் அலகில் ஜ்வலிக்கும் அது? மோதிரம் தான்!




இளவரசே! இதோ மோதிரம். இதைக் கொண்டு போய் என் தந்தையிடம் கொடுத்து அவரைத் தலை குனிய வையுங்கள்.
என் அழகுப் புவனா, அன்புப் புவனா!




புவனாவாகிய புறா அடுத்த விநாடி ரத்தக் கிண்ணத்தின் மீதாகப் பறந்தது. அதைத் தன் இறகுகளால் அணைத்துக் கொண்டது.













என் குதிரை லாயத்தில் ஒரு
குதிரை இருக்கிறது. இது வரை
அதை யாராலும் அடக்க முடிய
வில்லை. நாளைக்கு நீ அதன் மீது
ஏறிச் சவாரி செய்து அடக்கி
ஒடுக்கிக் கொண்டு வந்து
லாயத்தில் கட்ட வேண்டும்.
காலையில் உன்னை அழைத்துப்
போக ஆட்கள் வருவார்கள்.
அது வரை ஓய்வு
எடுத்துக் கொள்.


இத்தனை மாயாஜாலங்களையும் மந்திர தந்திரங்களையும் அறிந்த சசாங்கனுக்கு ஒரு குதிரையை அடக்கவா சக்தி இருக்காது? இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. என் புவனாவைக் கேட்டால் சொல்லுவாள்.


புவனா, புவனா! பறந்து வா என் உதவிக்கு...


புவனா, இந்தக் குதிரை விஷயம் எனக்குக் குழப்பமாக இருக்கிறது. அதன் ரகசியத்தைச் சொல்லுவாயா?
என் தகப்பனார் உங்களை எப்படியும் கொல்லத் திட்டமிடுகிறார். அந்தச் சூழ்ச்சிதான் இந்த அடங்காத குதிரை...


உண்மையில் அது குதிரையே இல்லை. என் தகப்பனார் தான் அந்தக் குதிரை. அதன் ஜீனம் என் தாயார். இரு பக்கமும் கால் வைக்கும் வளையங்கள் இருக்கின்றனவே அவை இரண்டும் என் மூத்த சகோதரிகள். அதன் கடிவாளம் தான் நான்.
கேட்கவே பிரமிப்பாக இருக்கிறதே.


நான் சொல்லுகிறபடி செய்தால் வெற்றி பெறுவீர்கள். கடிவாளத்தைக் கையாளாதீர்கள். விட்டு விடுங்கள். சவுக்குக்குப் பதில் நல்ல உறுதியான கழியாக இரு கைகளிலும் எடுத்துக் கொண்டு... இதற்கு மேல் நான் சொல்லவா வேண்டும்? ஆனால் உங்களைக் கீழே தள்ள அப்பா முயற்சி செய்வார் ஜாக்கிரதை...


புரிந்து கொண்டேன் புவனா. அந்த வித்தைக் குதிரைக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன். உடலிலுள்ள எலும்புகள் நொறுங்கும்படி வெளுத்து விடுகிறேன். ஆனால் பாவம், உன் பெற்றோர், சகோதரிகளாயிற்றே என்று தான்...
இந்தக் கொடியவர்களுக்குப் பெண்ணாகப் பிறந்ததற்கு வெட்கப் படுகிறேன் நான்.

தொடரும்



# சுவை மிகுந்த உலகம்
# ஷாலிமார் பிஸ்கட்டுகளின் உலகம்

SHALIMAR
GLUCOSE

SHALIMAR
NICE



ஆம்: உண்மை ! ஷாலிமார் பிஸ்கட்டுகளைக் கண்ணால் கண்டாலே நாவிலே நீர் சுரக்கும் ! பிஸ்கட்டு என்றால் ஷாலிமார் ! இதன் சுவைக்கு இணையில்லை ! ஒரு பிஸ்கட்டை சுவையுங்கள்; மற்றொன்றை சுவைக்கத் தூண்டும் உங்கள் மனம் ! உலகிலுள்ள சுவை அனைத்தையுமே அதனுள்ளே புகுத்தியுள்ளனரோ என்றுகூடத் தோன்றும் ! சாப்பிட்ட பிறகும்கூட, ஷாலிமார் பிஸ்கட்டின் இன்சுவை நாவிலே உலவி வரும் ! இதிலேதான் எத்தனை வகைகள்...ஷாலிமார் குளுகோஸ் பிஸ்கட்டு, ஷாலிமார் தின் ஆரோரூட் பிஸ்கட்டு, நாவிற்கினிய க்ரீம் பிஸ்கட்டு...இப்படி எத்தனையோ ! ஏன் இத்தனை வர்ணனை ? நீங்களே ஷாலிமார் பிஸ்கட்டுகளின் சுவை உலகை ரசித்துப்பாருங்கள் ! உற்றார் உறவினருடன் ஷாலிமார் பிஸ்கட்டுகளை சாப்பிட்டு இன்பமடையுங்கள்.



**சுவைக்கென்றே பிறந்தவை**
**ஷாலிமார் பிஸ்கட் வகை !**

CMSB-19.202 Tam



# தாய்

எஸ். லட்சுமிசுப்ரமணியம்

காரில் கொண்டுவந்து இறக்கிவிட்டுப் போனான் சுந்தரம். அவனுக்கு அன்று முக்கியமான அலுவலக வேலை. இருந்து தாயாரை ரயிலில் வழியனுப்ப நேரமில்லை. அதனால் அவளுக்குத் துணையாக ஓர் ஆளை நிறுத்தி விட்டுப் போய்விட்டான்.

ஆறரை மணிக்கு ரயில். ஐந்து மணிக்கே வந்தாகி விட்டது.

ராமு சென்னையில் வந்து காத்துக்கொண்டிருப்பான் அவளுக்காக. அவளை பஸ்ஸில் ஏற்றிவிட்டு விட்டுச் சைக்கிளில் அந்தப் பெட்டியைக் கயிற்றால் கட்டிக் கொண்டு வந்து சேருவான். மயிலாப்பூர் குளத்தருகே பஸ்ஸில் இறங்கி, கபாலீசுவரர் கோயில் கோபுரத்தைக் கண்ணால் அளந்தபடி வணங்கிவிட்டு, மெல்ல நடந்து போக வேண்டும். அங்கிருந்து வீடு அரை மைல் தூரம் தேறும்.

"முதல் வகுப்பு டிக்கெட் வாங்கிவிடுகிறேனே அம்மா?" என்று கேட்டான் சுந்தரம். அவள்தான் ஒப்புக்கொள்ளவில்லை.

"சரி. நீ என்ன செய்வாயோ? இந்தா அந்தப் பணம்" என்று கொடுத்துவிட்டான்.

மூன்றாம் வகுப்பு டிக்கட் வாங்கியது போக மிச்சம் எண்பது ரூபாய் இருக்கிறது. குழந்தை ராமுவுக்கு எத்தனையோ செலவுகள். அவள் கொடுத்தால் அவன் வேண்டாம் என்று தான் சொல்லுவான் முதலில். ஆனால் அவள் வற்புறுத்தினால் வாங்கிக் கொண்டு விடுவான்.

இருவருக்கும் நடுவே கோபு, குமார். நான்கு குழந்தைகளையும் விட்டு விட்டு அவள் கணவர் திடீரென்று மறைந்து போனது நினைவிருக்கிறது. சுந்தரம் இருபது வயதுப் பையனாகக் கல்கத்தாவுக்குத் தாயாருடன் வந்தது. ஞாபகம் இருக்கிறது...

சுருக்கெழுத்து படித்து முடித்து விட்டுக் கல்கத்தாவில் அவனுடைய தந்தையின் நண்பர் கொடுத்த சிபாரிசுக் கடிதம் ஒன்றை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தான் சுந்தரம். பஞ்சாலை ஒன்றில் அவனுக்கு வேலை கிடைத்தது. மானேஜருக்கு உதவியாக,

கூடவே பம்பாய், டில்லி இப்படி ஊர் சுற்றும் வேலை.

குழந்தைகளுடன் வேக் தெருவில் அவள் தனியாக இருப்பாள். 'கடக் கடக்' என்று சத்தமிட்டுக் கொண்டு செல்லும் டிராம் வண்டியை நின்று வேடிக்கை பார்க்கக் கோபுவையும், குமாரையும் அழைத்துக்கொண்டு போவாள். தேசப்பிரியா பார்க்கில் குழந்தைகள் பொழுது சாயும்வரையில் விளையாடுவார்கள். கூட இருந்து அழைத்துக்கொண்டு வருவாள். ராமு அப்பொழுது கைக்குழந்தை.

சுந்தரத்தின் வேலையில் கிடைத்த வருவாய் மட்டும் எப்படிப் போதும்? அவள் அப்பளம் இடுவாள். முறுக்கு, சீடை, தேன்குழல் எல்லாம் செய்வாள். குழந்தைகளுக்குத் தின்பதற்குக்கூடக் கொடுக்காமல், ஜன்னல் அடியில் உட்கார்ந்து வியாபாரம் செய்வாள்.

சுந்தரம் முன்பணம் கட்டி ஊத்துக்குழியிலிருந்து வெண்ணெய் வரவழைப்பான். பவானியிலிருந்து ஜமக்காளம் வரவழைப்பான். மாலையில் வேலை முடிந்த பிறகு அவனே வீடு வீடாகப் போய்க் கொடுத்து வியாபாரம் செய்து கொண்டு வருவான். கல்லூரியில் படிக்கவைக்க முடியவில்லை அவனே. அதற்குள் உத்தியோகப் பொறுப்பு வந்து விட்டது. தபால் மூலமாகவே அவன் படித்துப் பட்டம் வாங்கி விட்டான்.

இப்பொழுது நினைத்தாலும் பெருமையாக இருக்கிறது. அவனுடைய வளர்ச்சி அவ்வளவும் அவனுடைய உழைப்பின் பரிசு. நெற்றியில் பளபளக்கும் வியர்வையைப் பார்க்கும்போது அவளுக்கு மனம் கசியும். ''கொஞ்சம் உட்கார்ந்து கொள்ளேன் அப்பா!'' என்று விசிறியை எடுத்து விசிறுவாள். குளிரக் குளிர அந்தக் கை விசிறியின் காற்றில் ஐந்து நிமிடங்கள் உட்காரக்கூட அவனுக்குத்தான் பொழுது இருக்காது.

படிப்படியாக அவனுடைய உத்தியோகம் உயர்ந்து கொண்டு வந்தது. எவ்வளவோ பேர் பெண் கொடுக்க முன்வந்தார்கள். ஆனால் அவன்தான் கல்யாணம் செய்து கொள்ள மறுத்து விட்டான். கோபுவும் குமாரும் வளர்ந்து படித்து ஒரு நிலையில் வேலைக்குப் போவதைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஓர் ஆசை அவனுக்கு. [illegible] தனக்கென்று இன்னொரு குடும்[illegible] தேடிக் கொள்வதற்கு [illegible]

[illegible]

''எங்கே போகத் துடிக்கிறாய் அம்மா இப்படி?'' என்று கேட்டான் சுந்தரம்.

''கோபுவிடம்தான். குழந்தை தனியாகத் திண்டாடுகிறான். பக்கத்தில் நான் துணையாகப் போயிருக்க வேண்டும்.''

சுந்தரம் அவளை நிறுத்த முடியவில்லை.

காலையில் ஏழரை மணிக்கே சமையல் செய்து போட்டு, கையில் சிற்றுண்டியும் செய்து கொடுத்து மின்வண்டியில் ஏறத் தயார் செய்து அனுப்பி வைப்பாள். மாலையில் அவன் வீடு திரும்ப மணி ஏழாகிவிடும். குளிக்க வெந்நீர் போட்டுக் கொடுத்து, இரவில் அவனுக்குச் சப்பாத்தி செய்ய மாவைப் பிசைந்து கொண்டு உட்காருவாள்.

அலுவலகக் கதை யெல்லாம் சொல்லுவான் கோபு. அவளுக்குப் பாதிக்கு மேல் புரியாது. ஆனாலும் கவரில் சாய்ந்தபடி அவன் பேசுவதையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

கோபு இப்போது இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பன். உத்தியோகத்தில் உயர்ந்து விட்டான். கம்பெனியில் அவனுக்குக் கடன் கொடுத்து 'பிளாட்'கூட வாங்கிக் கொடுத்து விட்டார்கள். மொஸாயிக் போட்ட தரையும் பீங்கானும், மின்வசதியுமாக வீட்டில் அழுக்குப்படாமல் குடித்தனம் நடக்கிறது.

''இங்கேயே இருக்கலாமே அம்மா!'' என்று கோபு சொல்லிப் பார்த்தான். அவளுக்குத்தான் மனம் இல்லை. தாய்க்கோழி குஞ்சை இறகால் அணைப்பது போலக் குமாருக்குச் சென்னையில் வேலை ஆனதும் கூடவே கிளம்பிவிட்டாள்.

குமார் இந்தக் காலத்து வாலிபன். எத்தனையோ ஆசைகள் அவனுக்கு. அவளுக்கு அவை யெல்லாம் தெரியும். சுந்தரமும் கோபுவும் அனுப்பும் பணத்தைச் சேர்த்து வைத்து அவனுக்கு 'டெரிலின்' உடைகள் வாங்கிக் கொடுப்பாள். கையில் அவன் போட்டுக் கொண்டிருக்கும் கடிகாரம்கூட அவள் அப்படி குருவி அலகால் சேர்த்தது போலச் சேமித்த பணத்தில் வாங்கியதுதான்.

''அம்மா, நான் ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணப் போறேன். இப்போது இங்கே குமாஸ்தாவாக இருப்பது கொஞ்ச நாளைக்குத்தான். இங்கேயே அதிகாரியாக வந்து உட்காரப் போறேன்'' என்று சொல்லுவான்.

அவனுடைய கனவு வீணாகவில்லை. குமார் பரீட்சை பாஸ் செய்து விட்டான். மத்திய அரசு அலுவலகத்தில் அதிகாரியாக உத்தரவு வந்து கிளம்பியபோது, அவள் கூட வரவில்லை என்ற குறை அவனுக்கு.

[illegible] அழகுக்கும் உத்தியோகத்துக்கும் [illegible] அவனுடைய மேலதி[illegible] செய்துகொடுக்க [illegible] அழகான [illegible]

[illegible]

வெளுத்திருந்தது. கண்களில் இலேசான சோர்வு.

''என்னடா? உடம்பு சரியில்லையா?''

''ஒன்றுமில்லை அம்மா. போன வாரம் 'ப்ளு' ஜுரம் ஒரு நாள் அடித்தது. அப்புறம் அந்தச் சோர்வுதான்.''

''என்னடா! எனக்கு எழுதியிருக்கப் படாதோ? நான் கிளம்பி வந்திருப்பேனே?''

''ஒரு நாள் ஜுரத்துக்கா?'' என்று சிரித்தான் ராமு.

அன்று ஞாயிற்றுக்கிழமைதான். அலுவலகத்தில் வேலை இருக்காது என்றுதான் அவள் நினைத்துக் கொண்டு வந்தாள். கொஞ்ச நேரம் அவனுடன் உட்கார்ந்து பேசலாம் என்றுகூடத் திட்டம் போட்டிருந்தாள். ஆனால் வீட்டில் காலடி வைத்ததுமே, ''அம்மா! எனக்கு இன்று வேலை போட்டிருக்கிறார்கள். கொஞ்சம் சீக்கிரமாகச் சமைத்துப் போடுகிறாயா?'' என்று கேட்டுவிட்டுக் குளிக்கப் போய்விட்டான் ராமு.

வீட்டுக்கு வந்தாலும் அவனுக்கு ஒழிவில்லை. அடுத்த பதவி உயர்வுக்காகப் பரீட்சைக்குப் படிக்கிறான். எப்பொழுதும் நாற்காலியில் குறுக்கே பலகையை வைத்துக் கொண்டு எழுதிக்கொண்டே யிருக்கிறான்.

''அம்மா! உன்னிடம் ஒன்று கேட்பேன்'' என்று அவளை நிமிர்ந்து பார்ப்பான் ராமு.

''சொல்லேன்.''

''நான் கொஞ்சம் பெரிய வேலைக்கு வந்த பிறகு நீ என்னை விட்டுப் போகாமல் இருப்பாயா சொல்லு.''

''எனக்கு என்னடா? நாலு பக்கமும் தாங்கிக் காப்பாற்ற நாலு பிள்ளைகள். என்ன குறைச்சல் எனக்கு?''

''அதில் இந்தக் கை இன்னும் கொஞ்சம் பலவீனமான கைதான் அம்மா.''

''ரொம்ப நாளைக்கு இல்லை'' என்று அவன் தோளில் தட்டிக் கொடுத்துவிட்டு உள்ளே போவாள் அவள்.

ஐப்பசி மாதம். அடைமழையாகப் பிடித்துக்கொண்டிருந்தது. ராமு குடையை எடுத்துக்கொண்டு அலுவலகத்துக்குப் போய்விட்டான். இரண்டாவது குடை இல்லை. தலையில் சாக்கைப் போட்டுக் கொண்டு தேய்த்த பாத்திரங்களை உள்ளே எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள் அவள். இருக்கிற இரண்டு அறைகளில் ஒன்றில் ஈரம் காக்க ஆரம்பித்து விட்டது. அதைத் துடைத்து ஒற்றியாக வேண்டும்.

வாசற் கதவை யாரோ தட்டினார்கள். ஈரக் கையைத் தலைப்பில் துடைத்துக் கொண்டு வந்து கதவைத் திறந்தாள். வாசலில் குறுகலான சந்து கொள்ளாமல் பெரிய கார் நின்று கொண்டிருந்தது. கதவருகே கையில் பெரிய ஆப்பிள் கூடையுடன் நின்றான் சுந்தரம்.

''என்னடா இது, திடீரென்று?''

''இங்கே ஒரு மகாநாடு அம்மா. விமானத்தில் கிளம்பி வந்தேன், நேற்று சாயங்காலம். ராமு எங்கே?''

''ஆபீசுக்குப் போயிருக்கிறான். வா. உட்கார்'' என்று நாற்காலியைப் புடவைத் தலைப்பால் ஒற்றினாள்.

''கொஞ்சம் இரு. தட்டுப் போடுகிறேன், சாப்பிட.''

''பரவாயில்லை அம்மா. நான் காலையில் டிபன் சாப்பிட்டுவிட்டேன். மத்தியானம் ஒருவருடன் சாப்பிடுவதாக ஒத்துக் கொண்டிருக்கிறேன். பெரிய அதிகாரி அவர், மறுக்க முடியவில்லை கூப்பிட்டபோது.''

''இங்கேயே வந்து தங்கியிருக்கலாமேடா'' என்று அவள் சொல்லவில்லை. அவனுடைய நிலையும் அந்தஸ்தும் தெரியாதவளா? தாயானால்தான் என்ன? அவளை மனதாரப் பூஜிப்பவனானாலும் கூட என்ன? கோயிலும் வீடும் ஒன்றாக இருக்க முடியாதல்லவா?

''அம்மா...'' என்று குரல் தழுதழுக்க நிமிர்ந்தான்.

''என்னடாப்பா?''

''அங்கே பெரிய பங்களா இருக்கிறது. ஏவலுக்கு நாலு ஆட்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். சமையல் செய்ய ஆள் போட்டிருக்கிறேன். வெளியே போய் வரக் கார் இருக்கிறது. நாங்கள் எல்லாம் நீ சொன்னதைக் கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறோம். இங்கே ஏன் அம்மா இப்படி மழையில் நனைந்து கொண்டு, கிழிசல் புடவையைக் கட்டிக் கொண்டு, அடுப்படியில் புகையைப் புகையக் கண்ணைக் கசக்கிக் கொண்டிருக்கிறாய்?''

''சுந்தரம்'' என்று அருகில் வந்து நின்றாள் தாய். அவன் முதுகை நீவிய கைவிரல்களில் உள்ளத் துடிப்புத் தெரிந்தது. மழை ஈரத்தின் சில்லிப்பு இருந்தாலும் ஆதரவின் இதத்தை உணர முடிந்தது அங்கே.

''ஒவ்வொரு குழந்தையையும் வளர்த்துக் கைதூக்கி விடுவதுதானப்பா எனக்கு வேலை. ஒவ்வொரு மகனைச் சிறிய நிலையிலிருந்து மெதுவாக உயர்ந்து மேலே உயர்ந்து போவதைப் பார்த்துக் கொள்ளத்தான் நான் இருக்கிறேன். அப்படி ஒவ்வொருவனையும் இந்தக் கை சலிக்காமல் உழைத்துத் தூக்கி விட்டிருக்கிறது. அப்பா விட்டு விட்டுப் போன பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டு அந்தக் கடமையைச் செய்து கொண்டிருக்கிறேன். அந்தக் கடமைக்கு இடம் தாழ்ந்த நிலையில் தான்; மேலே இல்லை. அன்றாடம் அனுபவிக்கும் சிறிய கஷ்டங்கள் சொகுசான வாழ்க்கையில் இல்லையே அப்பா!''

''அம்மா!'' என்று தலை நிமிர்ந்தான் சுந்தரம். அவனுக்கு மேலே பேசத் தெரியவில்லை. கஷ்டமும் சிரமமும் இருக்கும் இடத்தில்தான் அன்பும் ஆதரவும் இருக்கும். இறைவன் அருளைப் போலத் தாயன்பும் பொங்கிக் கொண்டிருக்கும். அம்மா அங்கே வந்து சுகமாக இருக்க விரும்பவில்லை. இங்கே இருந்து சிரமத்தைப் பகிர்ந்து கொள்வதைத் தான் விரும்புகிறான்.

அதுதான் தாயாரின் மனம். அவள்தான் அம்மா.

''நான் வருகிறேன் அம்மா!'' என்று கிளம்பிப் படி இறங்கினான் சுந்தரம். ''ஆகட்டும்'' என்று தாயின் குரல் வாசல் வரை கூடவே துணை வந்தது.

மேலான ஒளி வீசி நெடுங்காலம்
உழைப்பவை

**கிராம்டன்** சூப்பர்கோல்ட்
:.பிட்டிங்குகள் மற்றும்
துணையுறுப்புகள் கொண்ட

**கிராம்டன்** :.ப்ளோரெஸெண்ட்
டியூப்லைட்கள்

நம்பகமான
மின்சார சாதனங்களுக்கு
நாடறிந்த பெயர் — கிராம்டன்!

Crompton
Greaves

AIYARS—CG.153 TM

# அம்மா

ரா. கணபதி

## 20. பகைவனுக்கு அருள்; பகைவனின் அருள்!

நிர்மலமான புன்னகையுடன் கூடிய, முழு மதியை நிகர்த்த, நினது மாற்றறியாத செழும் பசும் பொன் முகத்தைக் கண்ட பின்னும், கோபாவேசமான மஹிஷாசுரன் உன்னைத் தாக்க வந்தனனே, அது விந்தையிலும் விந்தையே.

ஸ்ரீ துர்கா ஸப்தசதீ 4.12

ஜயராம்பாடிவாசிகள் சிலர் கல்கத்தாவில் கங்கா ஸ்நானம் செய்வதற்காகப் புறப்பட்டனர். தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்ப விரும்பிய சாரதையும் அவர்களது துணையில் புறப்பட்டாள். அந்தத் 'துணை'யின் லட்சணம் பிற்பாடு தான் தெரிந்தது!

காமார்புகுரில் தந்தை ராமேச்வரரை இழந்து தவித்துக் கொண்டிருந்த லக்ஷ்மியும், அவளது சிறிய தம்பி சிவராமும் சாரு சித்தியுடன் சேர்ந்து கொண்டனர்.

எல்லோரும் கால்நடையாகப் புறப்பட்டனர். காமார்புகுரிலிருந்து எட்டு மைலில் உள்ள ஆரம்பாக் என்ற இடத்தை அடைந்தனர்.

ஆரம்பாக்கை அடுத்துத் தெலோ—பெலோ என்ற வனாந்தரப் பொட்டல் இருந்தது. அங்கே பயங்கரமான கொள்ளைக் கூட்டத்தினர் வசித்துவந்தனர். பகடி எனப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த இந்தக் கள்வர்கள் முற்காலத்தில் ராணுவ சேவையில் வீர தீரங்களைக் காட்டியவர்கள். பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டபின் இவர்கள் ராணுவத்தில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. அதனால் கொள்ளைக்காரர்களாக மாறினார்கள். தெலோ-பெலோ மத்தியில் உள்ள பயங்கர காளிக்குப் பூஜை நடத்திவிட்டுத் தங்களது கொலை, கொள்ளைகளை நடத்தி வந்தனர்.

விரைவாக நடந்தால் இருட்டு முன்னரே தெலோ—பெலோவைக் கடந்து தாரகேசுவரத்துக்குப் போய்விடலாமென நம் யாத்திரிகர்கள் முடிவு செய்தனர்.

பன்முறை நோய்களுக்கு ஆளாகியிருந்த சாரதை மிகவும் அசக்தமாயிருந்தாள். அவளுக்கு ஆரம்பாக்கிலேயே தங்கிச் செல்லலாம் என்று தான் இருந்தது. எனினும் தன் வழக்கப்படி, பெரியோர்கள் பேசும்போது அவள் குறுக்கிட்டு ஏதும் கூறவில்லை.

மற்ற யாத்திரிகர்களோடு நடந்தாள். ஆனால் நடக்க நடக்க அவளுக்குக் காலே இற்றுவிடும் போலாயிற்று. மெல்ல நடக்கலானாள்.

''வேகமாய் நட'' என்று உடன் வந்தவர்கள் உசுப்பினார்கள். ''இந்த நிதானத்தில் நடந்தால் நட்ட நடுநிசியில் நடுக் காட்டில் மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்'' என்று கடிந்து கொண்டார்கள். பின்தங்கி வந்த சாரதைக்காக மூன்று நான்கு முறை நின்று தாமதித்தும் பார்த்தனர். பிறகு அவளுக்காகத் தங்களையும் ஆபத்துக்கு உட்படுத்திக் கொள்வதற்கில்லை என்பதால் அவளைத் தன்னந் தனியாக விட்டுவிட்டு வேகமாக நடையைக் கட்டிவிட்டனர்.

''கொலைகாரா ள்ளாம் இங்கே நிறைய இருக்காளாம். சித்தியோடே நாம பின்னாடி வந்தா நமக்கும் ஆபத்துத்தான்'' என்று லக்ஷ்மியும் சிவராமும் பேசிக் கொண்டனர். அவர்களும் மற்ற யாத்திரிகர்களோடு சேர்ந்து கொண்டு சாரதையை விட்டுச் சென்றனர்!

ஜன சஞ்சாரமே இல்லை. கண்ணுக் கெட்டிய தூரம் காட்டுப் பகுதி. அதோ சூரியன் மலை வாயிலை நோக்கி வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறான். துன்பங்களையும் துயரங்களையும், இன்னல்களையும் இடுக்கண்களையும், கஷ்டங்களையும் கவலைகளையும் வழிய வழிய அநுபவித்துக் காட்டப் பிறந்த சாரதை தனியொருத்தியாக நடக்கமாட்டாமல் நடக்கிறாள். காலிலே வலி கனக்கிறது. மனத்திலே பயம் கனக்கிறது. ஏழையான அவளுக்கு மடியில் கனம் இல்லை. ஆனால் அவள் பருவ மங்கை அன்றோ? கொள்ளையர் கண்ணில் பட்டுவிட்டால்!

தகதகவெனச் செக்கர் கோலமாக ஜொலித்துவிட்டு சூரிய பகவானும் அவளைக் கைவிட்டுப் போய்விட்டான்! மாலை மயக்கம். தான் செல்கிற வழி சரியானதுதானா என்றுகூடத் தெரி

யாமல், எல்லையில்லா அயர்வோடும் அச்சத்தோடும் ஊர்ந்தாள் சாரு.

ஆஜானுபாகுவான ஒரு நெடிய உருவம் தன்னை நோக்கி வரக் கண்டாள். நின்ற இடத்தில் நிலைக்குத்திட்டுவிட்டாள். அவளது கால்கள் நகர மறுத்துவிட்டன. 'நகர்ந்தும் பிரயோஜனமில்லை; எந்தத் திசையில் ஓட்டம் பிடித்தாலும் மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்' என்று அவளது உள் மனத்துக்குத் தெரிந்திருந்தது. அதற்கும் உள்ளேயிருந்த மனம் சிம்மவாகினியிடம் சரண் புகுந்தது.

கன்னங் கரேல் என்ற உருவம்; 'நீண்ட பரட்டை முடி; மணிக்கட்டுகளில் வெள்ளிக் காப்பு; ஒரு கையிலே குண்டாந்தடி — இத்தியாதி லட்சணங்களுடன் வந்த அந்த உருவம் ஒரு தேறிய கொள்ளைக்காரன்தான் என்பதைச். சொல்லவும் வேண்டுமா ?

கிலியில் சப்த நாடியும் ஒடுங்கிய சாரதையை மேலும் அச்சமூட்டும் குரலில் அந்தக் கொள்ளைக்காரன் அடித்தொண்டையில் கர்ஜித்தான்: ''லே ! இம்மாம் பொளுதிலே இங்கிட்டு வந்து நிக்கறது யாருண்ணேன்? எங்கிட்டுப் போறியாம்?''

அந்தக் குரலில் விஷ வாடை வீசியது.

சாரதையின் ஸ்தம்பித்த நாவு தன்னையறியாமலே அசைந்து, ''கிழக்காலே போகணும்'' என்றது.



''இளக்கா போவணும்? இது வழி இல்லே. அந்தப் பக்கம் போறியா ?''— கொள்ளையன் கேலிக் குரலில் பேசுகிறான். அவனிடம் சிக்குவது தவிர வேறுவழியில்லை என்று கெக்கலிக்கிறான்!

'தங்கள் ராஜ்யம்' என்று சுவாதீனமாக முகமூடி போடாமலே வருகிற கள்வன் முன், முகத்தை இழுத்து மூடி நின்றாள் அபலை.

காற்று விசியது; அம்பிகையின் கருணை மூச்சுப்போல விசியது.

சாரதையின் முகத்தை மூடிய சேலைப் பகுதி பின்னே பறந்தது.

அவளது திருமுகத்தை நேருக்கு நேர் பார்த்தான் கொள்ளையன்.

இருள் பரவத் தொடங்கியிருந்தாலும் அந்த முகம் அவனுக்குத் தெற்றெனத் தெரிந்தது. தீபத்தைப் பார்க்க வேறு தீபத்தின் துணை வேண்டுமா, என்ன? நோயில் வாடிக் கறுத்த சாரதை இ கி வி ல் நிலைகுலைந்திருந்தபோதிலும் அவளது முகத்தில் எங்கிருந்தோ ஒரு சோபை வந்து மேவியிருந்தது.

பார்த்த கண் பார்த்தபடி அந்தத் திருமுகத்திலேயே திருஷ்டியைப் பதித்தான் திருடர் தலைவன். பொருள் விரும்பும் கொள்ளைக்காரனின் பார்வை அல்ல அது. வேட்கை கொண்ட காமுகனின் பார்வையும் அல்ல அது.

தின்னவரும் புலிதன்னையும் அன்பொடு
சிந்தையில் போற்றிடுவாம்
அன்னை பராசக்தி அவ்வுரு ஆயினள் அவளைக்
கும்பிடுவாம்

என்று கவி பாடினார். இங்கோ புலியே, தான் தின்ன வந்த ஜீவனை அன்னை பராசக்தியாகப் பார்த்து விட்டது! விஷப் புலிக்கும் தன் குட்டியினிடம் அமுதப் பால் பெருகும். இந்தப் புலி தன் குட்டியைக் காணவில்லை; அம்மாவைக் கண்டது.

ரசவாதம் நடந்தது! இரும்பு மனசு பொன்னாயிற்று!

கள்வனின் விஷக். குரலில் அமுதம் ஊற்றெடுத்தது.

''பயம் வேணாம் தாயே! நானும் பொம்புள்ளையோட வாளறவன்தான். அது பின்னாடிதான் வந்துட்டிருக்கு'' என்றான் மிருதுவான குரலில்.

காலடிச் சத்தமும் கேட்டது. கள்வனின் மாறுதலிலேயே ஓரளவு தெளிவு பெற்ற சாரதைக்கு, தன்னைப் போன்ற பெண் ஜன்மா ஒன்று வருகிறது என்ற எண்ணத்தில் ஆறுதல் உண்டாயிற்று.

திருடர் தலைவனைப் பார்த்து முத்துப் போல் பேசினாள். அவனைத் தாஜா செய்ய வேண்டும் என்று சாதுரியம் செய்யாமல், மெய்யாலுமே மனத்தில் வந்ததை வார்த்தையில் வடித்துப் பேசினாள். ''அப்பா, என்னோட வந்தவங்க கல்கத்தா வழி போயிட்டாங்க. தனியா நின்னுட்டேன். போற வழியைத் தப்ப விட்டுட்டேன்னும் தோணறது. தயவுசெஞ்சு என்னை அழைச்சுண்டு போய் அவாகிட்டே சேர்த்துடறியா? உன் மாப்பிள்ளை தக்ஷிணேசுவரத்துலே, ராணி ராஸமணி கட்டின காளி கோயிலிலே இருக்கார். அவரைப் பார்க்கத்தான் போயிண்டிருக்கேன். நீ எங்களோட அங்கே வந்தா அவர் உன் மேலே அன்பைக் கொட்டுவார்'' என்றாள்.

அவன் இவளை அம்மாவாகப் பார்த்துபோல், இவளும் அவனை அப்பாவாகவே பார்த்து, அவனிடம் நம்பிக்கை வைத்தாள். அதனால்தான் இப்படிப் பாலாகப் பேசினாள்.

கள்வன் கனிந்து நின்றான். ஓங்கிப் பிடித்த குண்டாந் தடி தழைந்தது.

அவனது மனைவி அருகே வந்தாள். அவளும் சாரதையின் முகத்தைப் பார்த்தமாத்திரத்தில் அடியோடு உருகிப் போனாள். நம்பிக்கையுடன் அவளது கையைப் பிடித்துக் கொண்டாள் சாரதை. ''அம்மா! நான்தான் உன் மகள் சாரதா. தன்னந் தனியா பயந்து நிக்கறச்சே அதிருஷ்டவசமா அப்பாவும் நீயும் வந்தேளோ, நான் பிழைச்சேனோ? இல்லாட்டா என்ன ஆபத்து வந்திருக்குமோ ?'' என்றாள்.

ஆபத்து இந்த இருவரிடமிருந்தே வந்திருக்கும்! ஆபத்துக்காரர்களையே ஆப்தர்களாக்கிக் கொண்டுவிட்டாள்!

கொள்ளைக்காரரின் மனத்தைக் கொள்ளை கொண்டாள் அன்பும், நம்பிக்கையும் உருவான சாரதை.

''தாயே, நீ எங்களுக்கு மவதான். நாங்க உன்னைக் கவனிச்சுக்கறோம். துளிக்கூடக் கவலைப்படாதே. இப்போ நடந்து களைச்சிருக்கே! துன்னுட்டுப் படுத்துக்குவியாம். காலையிலே நாங்களே உன்னை அழைச்சிக்கிட்டுத் தாரகேசமோ, தெட்சணேசமோ போறோம்'' என்று பரிவு மயமாக முன்வந்தனர் பறிமுதல்காரர்கள்.

சாரதையும் உடன்பட்டாள். அவள் பிராமணப் பெண், அதிலும் பரம சத்துவமானவள் என்பதும்; அவர்கள் பகடித் தம்பதியர், அதிலும் கொள்ளைத் தொழில் செய்பவர் என்பதும் அன்பின் சந்நிதானத்தில் அடிபட்டே போயின.

மூவரும் நடந்தனர்.

பொட்டல் மறைந்து சிறிது மனித நடமாட்டம் உள்ள ஓரிடம் வந்தது. அங்கே ஒரு பெட்டிக் கடை இருந்தது. கொள்ளைக்காரன் மனைவி தன் துணி மூட்டையைப் பிரித்து சாரதைக்கு 'மெத்தை' தயார் செய்தாள். அன்புக்

ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'

MAFATLAL GROUP

## எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆள்வருகிறான்,
எங்கும் அவன் செங்கோல்.
'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.

'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும், எடுப்பான வண்ணங்களிலும், பெருமிதப் பிரிண்டுகளிலும் 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழை கலந்த காட்டன் சேலைகள்; 'ஜெஃப்ரின்' பாலியெஸ்டர் இழை கலந்த கம்பளித் துணிகள்—

இலேசான வானங்கள், கோடை நிழல் படரும் செம்பரிக்குகள், கோலாகல நகை மிளிரும் பாப்ளின்கள்; அதிநவீனமான அரும்பெரும் அழகு வண்ணங்களிலும், பிரிண்டுகளிலும் 'டெரோவெல்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**



ரெடிமேட் ஷர்ட்டுகள் வாங்கும்போது தரமான மபத்லால் உடைகளுக்கான 'ஸ்மார்ட்டி' சின்னம் இருக்கிறதா பாருங்கள்!

குக் கட்டுப்பட்ட சாரு அந்தத் துர்நாற்றத் துணிக் குவியலில் தனது களைத்த உடலைச் சாய்த்தாள்.

கொள்ளைக்காரன் எங்கிருந்தோ அவலும், வெல்லம் கலந்த பொரியும் சம்பாதித்து வந்தான்.

சாரதை அதனை உண்டாள், தேவாமுதமாகக் கருதி.

''நல்லாத் தூங்கம்மா! இங்கே திருட்டுப் பசங்க நடமாட்டம் சாஸ்தியாச்சேன்னு பயந்துட்டுத் தூக்கத்தைக் கெடுத்துக்காதே. நான் முனிச்சிட்டே உக்காந்திருந்து காவலிருக்கேன், ஆமாம்!'' என்றான், அன்று மாலை வரையில் பக்காத் திருடனாக இருந்தவன்.

நிச்சிந்தையாக நித்திரை கொண்டாள் சாரதை.

காலையில் எழுந்திருக்கையில் கால் வலி வெகுவாகக் குறைந்திருந்தது.

புதிய பெற்றோருடன் தாரகேசுவரத்துக்குப் பயணம் தொடங்கினாள்.

வழியிலே கொள்ளையன் மனைவி பச்சைப் பட்டாணிக் காய்களைப் பறித்து அதன் பருப்புக்களைச் சாரதையின் கையில் போட்டுக் கொண்டே வந்தாள். சாரதை பரம சந்தோஷமாக அதைக் கொரித்துக் கொண்டு நடந்தாள்.

எட்டு மணி சுமாருக்குத் தாரகேசுவரம் அடைந்தனர்.

''ராவுக்கே என் மவ முக்காப் பட்டினி கெடந்திச்சு. இன்னிக்காவது வயிறார எதுனச்சியும் கொணுருவியாம். மொதல்லே கோயிலுக்கே போய்க் கும்பிடு. அப்புறம் சந்தைக்குப் போயி, அவலு, பொரி, பளம், கிளம் எல்லாம் வாங்கியா'' என்று பகடியை அனுப்பி வைத்தாள், அவன் மனைவி.

சாரதையுடன் 'துணை' வந்த கோஷ்டி அவளைக் கண்டு பிடித்தது. அவளை நல்லபடியாகக் கண்டதில் அவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி. சாரதை அவர்களிடம் சிறிதும் மனத்தாங்கல் கொள்ளாமல் தன்னுடைய புதிய அம்மாவை அறிமுகம் செய்தாள்.

உலகனைத்தையும் தழுவ விருக்கும் சாரதையின் தாயொளி இந்தக் கள்வர்களின் இருளைத் துளைத்து விரட்டி விட்டது என்பதை சக யாத்திரிகர்கள் உணர்ந்திருப்பதற்கில்லை. ஆனாலும் இந்தப் பகடித் தம்பதி அவளைக் கண்ணும் கருத்துமாகக் காத்துத் தந்தது அவர்களுக்கு அதிசயமாகவே இருந்தது.

கள்வர் தலைவன் சாரதைக்கு உணவுப் பண்டங்கள் வாங்கி வந்தான். யாத்திரிகர்கள் சமையல் செய்தனர். பகடித் தம்பதி உள்பட அனைவரும் ஆனந்தமாகப் பகலுணவு கொண்டனர்.

பிரயாணம் தொடங்கியது. பகடித் தம்பதி விடை கேட்டனர்.

''ஊஹூம், நீங்க ரெண்டு பேரும் தக்ஷிணேசுவரத்துக்கு வரணும்'' என்றாள் சாரதை.

''இல்லேம்மா, இப்போ நாங்க வரத்துக்கில்லே. அப்புறம் எப்பனச்சியும் நிச்சயமா வாரோம்'' என்றான் பகடி.

ஓர் இரவிலேயே ஒரு வாழ்நாள் முழுதும் பழகியது போன்ற வாஞ்சை அவர்களிடையே தழைத்தது.

கள்வனின் கன்னம் கண்ணீரில் நனைந்தது. அவன் மனைவி வாய் விட்டு அழுதாள். இளகிய நெஞ்சு கொண்ட சாரதையைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

பிரிய மனமின்றி அவளுடனேயே மேலும் சிறிது தூரம் நடந்தனர் அத்தம்பதி. பட்டாணிக்காய்களைப் பறித்து அவற்றின் பருப்புக்களை எடுத்து சாரதையின் முந்தானையில் முடிந்தாள் பகடிப் பெண்மணி. ''என் செல்ல மவளே ஸாரு! ராத்திரி சோறு துன்னறச்சே இந்த அம்மாவை நெனைச்சுட்டு இந்தப் பட்டாணியும் சேர்த்துக்கோ'' என்று திக்கு முக்காடிக் கூறினாள்.

தக்ஷிணேசுவரத்துக்கு வருவதாக அவர்களிடமிருந்து உறுதி மொழி வாங்கிக் கொண்டு விடைபெற்றாள் சாரதை.

சொன்ன சொற்படியே செய்தனர் அந்தப் பகடித் தம்பதியர். 'மவளு'க்கும் 'மருமவப் புள்ளை'க்கும் 'பளம்-கிளம்' எல்லாம் வாங்கிக் கொண்டு தக்ஷிணேசுவரத்துக்குச் சென்றனர். சாரதையிடமிருந்து அவர்களைப் பற்றி அறிந்திருந்த ராமகிருஷ்ணர், அவள் சொன்னவாறே அவர்கள் மீது அன்பைக் கொட்டினார்.

அதன் பின் பலமுறை அவர்கள் தக்ஷிணேசுவரத்துக்கு வந்து போயினர்.

''என்னோட கொள்ளைக்கார அப்பா—அம்மா எவ்வளவு சூது வாதில்லாதவா தெரியுமா? நேர்மையிலும் அவா மகா உசத்தி. இருந்தாலும் இவா கூட இதுக்கு முன்னாடி கொலையும் கொள்ளையும் நடத்தி யிருக்காளேன்னு நினைக்கிற போதெல்லாம் எனக்கு விசித்திரமாயிருக்கும்'' என்று நம் அம்மா சொல்வதுண்டு. இதிலிருந்து என்ன தெரிகிறது? அவர்கள் சாரதையைக் கண்டதிலிருந்து, அவளிடம் நேயமுடன் நடந்து கொண்டது மட்டுமின்றித் தங்களது வழிப்பறித் தொழிலையே விட்டு விட்டார்கள் என்றாகிறதல்லவா?

சாரதையிடம் அவர்கள் அப்படி என்ன கண்டார்கள்?

அன்று அந்த அந்தி மயக்கத்திலே அவளது சுந்தர முகத்திலே அவர்கள்



என்ன கண்டார்கள்? அவர்கள் கண்டதென்ன என்று சாரதைக்குத் தெரியும். ஆயினும் ரகசியமாகவே வைத்திருந்தாள்! ஒருமுறை அவர்கள் தக்ஷிணேசுவரத்திலிருந்து விம்மியபடி விடை கொண்டபோது உடன் இருந்த பக்தர் ஒருவர் இந்த ரகசியத்தை அறிந்து வெளியே அவிழ்த்து விட்டிருக்கிறார்!

''என்னிடம் இத்தனை பாசம் வைக்கும்படி என்ன கண்டுட்டேள்? வனாந்தரத்திலே என்னைக் காப்பாத்தினேளேன்னு நான் உங்ககிட்ட பிரியம் வைக்கறது நியாயம். உங்களுக்கு எதனாலே எங்கிட்ட இத்தனை வாஞ்சை?'' என்று அவர்களை வினவினளாம் சாரு.

''உங்கிட்ட 'வான்சைஷ' வெக்காம இருக்க முடியுமாங்காட்டியும்! உன் மொவத்திலே எங்கம்மா காளியாத்தாளையேன்னு பாத்தோம்? நீ எல்லாரையும் போல மனுஸ சன்மாவா என்ன?'' என்று அத்தம்பதி ஒரு குரலில் பேசினர்.

''என் அன்புங்களே! அப்படியெல்லாம் சொல்லாதீங்க. எங்கிட்டவாவது, காளிமாதாவைப் பார்க்கறதாவது?'' என்று மறுத்துப் பேசினாள் சாரதை.

''ஆங். அப்பமுன்னு நாங்க பொய்யா பேசறோம்?'' என்று ரோஷத்தோடு அந்தத் தம்பதியரும் மறுத்துப் பேசினர். ''நாங்க நல்லாக் கண்ணைத் தொறந்துட்டுப் பாக்கச்சேயேதான் நீ காளி ஆயியா நிண்ணே! அதிலே ரவைகூட சந்தேகம் கெடையாது. ஆனா நாங்க கொலேகாரப் பாவிங்க, கொள்ளைக்காரப் பாதகங்க, அதனாலே எங்ககிட்ட ரெகஷியத்தை மறைக்கப் பாக்குறே!'' என்றனர்.

நம் அம்மா சற்றும் பட்டுக்கொள்ளாமல் சொன்னாள்: ''யாரு கண்டா? யாரு கண்டாளோ, காணல்லியோ, எனக்கு இதெல்லாம் லவலேசம்கூடத் தெரியக் காணோம்.''

பகைவன் அவனுக்கு அருள் செய்தான் எனில், அதற்குக் காரணம் இவன் அந்தப் பகைவனுக்குச் செய்த பேரருள்தான்! அந்தப் பேரருளால் காளி மாதாவை அல்லவா தரிசித்திருக்கிறான்!

சாக்ஷாத் சகலதேவ சக்தியான பதினெண்கர மகாலக்ஷ்மி தனது அருள் நிறைந்த மதிமுகத்தைக் காட்டிய போதும் மகிஷாசுரன் மனம் மாறாமலே அவளுடன் போரிட்டான். மகிஷனுக்குக் கிடைக்காத அருள் பகடிக் கொள்ளைக்காரனுக்குக் கிட்டியது.

''கொள்ளைக்காரர்களின் தலைவனான பரமேசுவரனுக்கு நமஸ்காரம்; வஞ்சகனுகவும், படு வஞ்சகனுகவும், வஞ்சனையாகக் கொள்ளையிடுபவர்களின் தலைவனுகவும் உள்ள பரமேசுவரனுக்கு நமஸ்காரம்'' என்று, அனைத்திலும் ஈசுவர ஸ்வரூபத்தைக் காணும் வேத மந்திரங்கள் உத்கோஷிக்கின்றன. சாரதையின் சரிதையில் இவளும் கொள்ளைக்காரனில் அப்பாவை — ஈசனைப் பார்க்கிறாள். அவனும் இவளில் அம்மா — அம்பாளைப் பார்த்து நமஸ்கரிக்கிறான்!

தெலோ பெலோவின் பயங்கரக் காளியை அவன் வழிபட்டான். அந்த வழிபாட்டுக்கிரங்கி, அவளே அபயங்கரியான சாரதையாக வந்து அவனைக் காத்து விட்டாள்!

கருவேல மரத்தைச் சந்தன விருட்சமாக்கிய இந்தச் சம்பவத்தைப் பற்றி தேவி சாரதை அதிகம் குறிப்பிடவே மாட்டாள். காரணம் தன் மகிமையை ஒளிப்பது மட்டுமல்ல; இன்னொரு பரம கௌரவமான காரணமும் இருந்தது.

ஒரு முறை சலிப்புடன் நம் அம்மா சொன்னாள்: ''இதைப் பத்திச் சும்மா எங்கிட்ட கேக்காதேள். ஏன்னா, அந்தச் சமயத்திலே லக்ஷ்மியும், சிபுவும் (சிவராமும்) என்னோட வந்தான்னு ரொம்பப் பேருக்குத் தெரியும். இந்த விருத்தாந்தத்தை நான் சொன்னா மத்தவாளைப் போல அவாளும் என்னைத் தன்னந்தனியா காட்டு வழியிலே விட்டுட்டுப் போனாளேன்னு உங்களுக்குத் தோணும். எது எப்படியானாலும் அவா என் குழந்தைகள். அந்தக் குழந்தைகளுக்கு அவமானம் சம்பாதிச்சுக் கொடுத்தா என் பிரபாவத்தைக் காட்டிக்கணும்?''

தன் பெருமையை ஒளித்தது போலவே பிறரது சிறுமையை ஒளிப்பதும் அவளுக்குச் சுபாவமல்லவா!

> பாத்திரத்திலுள்ள நீர் பளிச்சிடுகிறது; மாகடல் நீரோ கறுத்துக் கிடக்கிறது. சிறிய உண்மைகளை வெளியிடத் தெளிவான வார்த்தைகள் உண்டு; மகா சத்தியங்களோ மௌனத்திலேயே உள்ளன.
>
> — தாகூர்

கிராமத்தில் சுயேச்சையாக வாழ்ந்த சாரதை தக்ஷிணேசுவர நஹபத்துக்குள் சுயேச்சையாகச் சிறைப் பட்டாள்! ஆனால் சாரதை முடங்கிக் கிடப்பது சம்பு பாபுவின் மனைவிக்குப் பொறுக்க வொண்ணாத கஷ்டமாக இருந்தது. மங்களவாரம் தோறும் அவளைத் தன் இல்லத்துக்கு அழைத்துச் சென்று அவளது பாதத்தில் மலரிட்டு வணங்குவாள் ஸ்ரீமதி சம்பு பாபு.

நஹபத்தை விட விசாலமான ஒரு கூரை வீடு அமைத்து சாரதா தேவிக்குத்



> **ஆத்திரம் கொள்பவனை அன்பால் வெல்வாய்; தீயவனை நன்மை காட்டி வெல்வாய்; பேராசை கொண்டவனைத் தயாளத்தால் வெல்வாய்; பொய்யனைச் சத்தியத்தால் வெல்வாய்.—புத்தர்**

தர விரும்பினார் சம்பு பாபு. ஆலயத்தின் அண்மையிலேயே ஒரு மனைக்கட்டை இருநூற்றைம்பது ரூபாய்க்கு வாங்கினார்.

ராமகிருஷ்ணரைக் குருநாதரென மதித்த காப்டன் விசுவநாத உபாத்தியாயருக்கு இவ்விஷயம் தெரிந்தது. பேலூரில் இருந்த நேபாள சர்க்கார் மரக் கிடங்கின் அதிகாரியாகிய அவர் சாரதையின் குடிலுக்கான மரம் முழுவதையும் தாமே வழங்குவதாக முன்வந்தார். தக்ஷிணேசுவரத்துக்கு எதிர்க் கரையில் இருந்தது பேலூர் மரக் கிடங்கு. நீரோட்டத்தின் திசை சாதகமாக இருந்தபோது மூன்று பெரும் மரக்கட்டைகள் தக்ஷிணேசுவரத்துக்கு மிதக்க விடப்பட்டன. துரதிருஷ்டவசமாகச் சிறிது போதுக்குப் பிறகு வெள்ளத்தின் கதி மாறியது. இரண்டு கட்டைகள் மட்டுமே தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தன. ஒன்று வேறெங்கோ அடித்துச் செல்லப்பட்டது.

''உங்களுடைய துர்ப்பாக்கியம்தான் எல்லா இடத்திலேயும் தொடர்ந்து வரது'' என்று சாரதையிடம் நறுக்கெனக் கூறினார் ஹ்ருதயர். 'சின்ன மாமி'க்கு விசேஷ அந்தஸ்து ஏற்பட்டு, தனி வீடு கிடைப்பது அவருக்கு ஆத்திரமூட்டியதால் அப்படிப் பேசினார். ''உங்களுக்கு உதவி செய்யறேன்னு வந்த தோஷம், சம்பு பாபுவுக்கு என்ன கெடுதல் வரப்போறதோ?'' என்று கடுமையாகக் கூறி சாரதையின் மனத்தைப் புண்படுத்தினார். சாகுருவி போல் ஹ்ருதயர் பேசியதாலோ என்னவோ அடுத்த ஆண்டே சம்புபாபு காலமாகி விட்டார்!

மனஸ்வியான காப்டன் உபாத்யாயா இன்னொரு கட்டை அனுப்பினார். சாரதைக்கெனக் கூரை வீடு எழும்பியது. வேலைக்காரப் பெண் ஒருத்தியுடன் தேவி அங்கு குடிபுகுந்தாள். ஹ்ருதயர் தம் மனைவியையும் அங்கே குடி ஏற்றினார். இதிலே அவருக்குச் சிறிது ஆறுதல்!

தினமும் சாரதை அந்தக் குடிசையில் ராமகிருஷ்ணருக்கு உணவு தயாரிப்பாள். அதை அவரது இருக்கைக்கு எடுத்துச் சென்று பரிமாறுவாள். சிறிது உரையாடிவிட்டுத் திரும்பி விடுவாள்.

ராமகிருஷ்ணரும் அவ்வப்போது அங்கு வந்து அவளது சௌக்கியத்தைக் கவனித்துக் கொள்வார். ஒரு நாள் மாலை அவர் அங்கு வந்த பின் கனமழை பொழியலாயிற்று. குடிலிலேயே உண்டுவிட்டுப் படுத்தார்.

எதையோ நினைத்துக் கொண்டு அவர் சிரித்துக் கொள்வதைக் கவனித்த தேவி, ''என்ன சிரிக்கிறேள்?'' என்றாள்.

''எல்லாக் காளி கோயில் பூஜாரிகளும் அன்றாட பூஜை ஆன அப்புறம் அகத்துக்குப் போய்ச் சாப்பிட்டுப் படுத்துப்பாளோன்னோ? இன்னிக்கு ஒருநாள் நானும் அந்த மாதிரிக் கோயிலை விட்டுட்டு வந்து...'' விழுந்து விழுந்து சிரித்தார் ராமகிருஷ்ணர்.

ராமகிருஷ்ணருக்கு உக்கிரமான வயிற்றுக் கடுப்புக் கண்டது. சாரதை அவரிடமிருந்து விலகிக் குடிலில் வசிப்பது சாத்தியமாயிருக்கவில்லை. கண்டான் முண்டான்கள் நிரம்பிய நஹவத்தை மீண்டும் அவள் வசிப்பதற்கு லாயக்காக ஒழித்துவைக்கும் வரையில் எப்படி அவரை விட்டு இருக்கப் போகிறோம் என்று கலங்கினாள். கலக்கத்தைத் தீர்ப்பதற்கென்றே எங்கிருந்தோ வந்து குதித்தாள் ஒரு கிழவி. ''காசியிலிருந்து வருகிறேன்'' என்று மட்டுமே தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டாள். அவளது பூர்வோத்தரம் ஏதும் தெரியவில்லை. சர்வ சகஜமாக ராமகிருஷ்ணரின் மனத்தையும் உடற்போக்கையும் அநுசரித்து அவருக்குப் பணிவிடை புரியலானாள்.

''என்னதான் பணிவிடை பண்ணினாலும் உன்மாதிரி பண்ண என்னால் ஆகாதடி அம்மா. குடிசையைக் காலி பண்ணிண்டு நஹவத்துக்கே வந்து சேரு. நானும் என்னிடத்துக்குப் போய்ச் சேருகிறேன்'' என்றாள் சாரதையிடம்.

''எனக்கும் அப்படித்தான் உத்தேசம் பாட்டி. ஆனா ஹ்ருதயரோட ஆத்துக்காரி எப்படித் தனியா இருப்போ?''

''அதைப் பற்றி உனக்கென்ன கவலை? நீ இங்கே வந்து சேரு.''

சாரதை நஹவத்துக்கு மீண்டும் வந்துவிட்டாள்.

அன்றிரவு காசி நகரக் கிழவி சாரதையை ராமகிருஷ்ணரிடம் அழைத்துச் சென்றாள். தேவி மீனாக்ஷியை சோமசுந்தரேசுவரனுக்கு அளித்த காஞ்சனமாலையைப் போல, சாரதையை ராமகிருஷ்ணரின் முன் நிறுத்தினாள்.

ராமகிருஷ்ணரைப் பார்த்து ''அப்பனே, உன் முன்னாடிக்கூட முக்காடு போட்டுண்டே இருக்கிற இந்த மோகனாங்கியின் முக மண்டலத்தை இதோ பாரு'' என்று சொல்லிக் கொண்டே சாரதையின் தலைமீதிருந்த சேலையை விலக்கினாள் கிழவி. (தொடரும்)

பெரும்பாலான கட்டிடக் கலை நிபுணர்கள் சிபாரிசு செய்வது

# அரசு சிமெண்ட்

அதற்கு, மேலான மூன்று காரணங்கள்:

- **பருவநிலை எப்படி இருந்தாலும், பெயிண்ட் உரிவதில்லை**
- **சிக்கனமாக உபயோகித்துச் சீராகக் கட்ட முடிகிறது**
- **கலவையில் அதிக மணல் ஏற்கிறது**




தரத்தில் நல்ல சிறந்த அரசு உயர்ரக போர்ட்லண்ட் சிமெண்ட் இந்த அதிநவீன அற்புதக் கட்டிடத்தை வடிவமைத்த கட்டிடக் கலை நிபுணரின் உள்ளத்தில் முதலில் தோன்றியதற்கும், இவையே காரணங்கள். கட்டுமானங்கள் கட்டுறுதி குலையாமல் பல்லாண்டுகள் கட்டழகுடன் விளங்கச் செய்யும் சிமெண்ட் இது என்பதை அறிவார் அவர்.

விஷயம் அறிந்தவர்கள், தரமுயர்ந்த அரசு போர்ட்லண்ட் சிமெண்டையே உறுதியாக சிபாரிசு செய்கின்றனர். தமிழ்நாட்டில் அரசினர் துறையில் அமைந்த முதல் சிமெண்ட் ஆலையான தமிழ்நாடு சிமெண்ட்ஸ் உற்பத்தி செய்யும் இந்த சிமெண்டின் அருமையை உணர்ந்தவர்கள் அவர்கள். நாடு காக்கும் பணிகளுக்கும், நாட்டைக் கட்டி உருவாக்கும் காரியத்துக்கும் மிக அவசியமான இந்த சிமெண்ட் நான்கு லட்சம் டன் தயாரித்திடும் வகையில் உற்பத்தி முடுக்கிவிடப்பட்டிருக்கிறது.

**தமிழ்நாடு சிமெண்ட்ஸ்**

(தமிழ்நாடு அரசுக்குச் சொந்தமான நிறுவனம்)

ஆலங்குளம், ராமநாதபுரம் மாவட்டம்.

**அரசு – வலிவும் வனப்பும் வாய்ந்தது**

AC-21R

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

அத்தியாயம் தொண்ணூறு

## பொன் மழை பொழிந்தது!

**வ**ந்தியத் தேவன் ஆனைமலைக் காட்டுக்குத் தான் சென்று வந்த வரலாற்றைக் கூறி முடித்ததும் குந்தவை அவனைப் பார்த்து, "ஐயா! நீங்கள் கூறிய வரலாறு மிக அதிசயமாக இருக்கிறது. உண்மை நிகழ்ச்சிகள்தானா என்று சந்தேகமும் சில சமயம் எனக்கு ஏற்பட்டது. கதை புனைந்து கூறுவதில் தாங்கள் கெட்டிக்காரர் என்பதை அறிவேன். அதிலும் தாங்கள் அடிக்கடி பேச்சை நிறுத்தி மேலும் கீழும் பார்த்து விழித்துவிட்டுப் பேச்சைத் தொடங்கியபோது என்னுடைய சந்தேகம் மேலும் அதிகமாயிற்று!" என்றாள்.

வந்தியத் தேவன் மற்றும் ஒரு முறை மேலும் கீழும் பார்த்து விட்டுக் குந்தவையை நோக்கினான்.

"தேவி! புனைகதை சொல்லுவதற்குவேறு இடங்கள் இருக்கின்றன. என்னுடைய அந்தச் சாமர்த்தியத்தைத் தங்களிடம் இதுவரையில் நான் காட்டியதில்லை. இடையிடையே என் பேச்சுத் தடைப்பட்டதற்கு வேறு ஒரு காரணம் உண்டு!" என்றான்.

"அதுவும் பெரிய ரகசியமா? பெண்களிடம் சொல்லக் கூடாததா?" என்று கேட்டாள் குந்தவைப் பிராட்டி.

"வேறு யாரிடமும் சொல்லக்கூடாத இரகசியம்தான். ஆனால் தாங்கள் அநு





மதி கொடுத்தால் அதையும் சொல்லுகிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''உண்மையைச் சொல்லுவதற்கு எப்போதும் என்னுடைய அநுமதி உண்டு'' என்றாள் குந்தவை.

''அப்படியானால் சொல்லிவிடுகிறேன். பிறகு என்னைக் கோபித்துக் கொள்வதில் பயனில்லை. நான் தங்களிடம் பேசிக்கொண்டிருக்கும்போது சில சமயம் தற்செயலாகத் தங்கள் விழிகளில் என் பார்வை பதிந்து விடுகிறது. தேவியின் கரிய கண்களில் என்ன அரிய மாயம் இருக்கிறதோ, தெரியவில்லை. அது என்னை அப்படித் திகைத்து நிற்கும்படி செய்து விடுகிறது. மறுபடியும் சமாளித்துக் கொண்டு பேச்சைத் தொடங்குகிறேன்!'' என்றான்.

குந்தவையின் இதழ்கள் விரிந்தன; கன்னங்கள் குழிந்தன; கண்கள் சிரித்தன.

"ஐயா! என்னுடைய கண்களில் அரிய மாயம் ஒன்றுமில்லை; கரிய மாயமும் இல்லை. சில காலமாக மையிட்டுக் கொள்வதையும் விட்டு விட்டேன். என்னுடைய கண்களில் தாங்கள் தங்களுடைய உருவத்தைத்தான் பார்த்திருப்பீர்கள். அதுதான் தங்களைத் திகைப்படையச் செய்திருக்கும்!" என்றாள்.

"தேவி! என்னுடைய உருவத்தை நான் கண்ணாடிகளில் பார்த்திருக்கிறேன். தெளிந்த நீரில் பிரதிபலிக்கப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் நான் எந்தவிதத் திகைப்பும் அடைந்ததில்லை" என்றான் வல்லவரையன்.

"என் கண்களைக் கண்ணாடிக்கும் தண்ணீருக்கும் ஒப்பிடுகிறீர்களா? கண்ணாடி மங்கிவிடும்; தண்ணீர் கலங்கிவிடும்!" என்றாள் இளவரசி.

"கண்ணாடி மங்கினால் துடைத்துச் சுத்தம் செய்வேன். தண்ணீர் கலங்காமல் பார்த்துக் கொள்வேன். தங்கள் கண்களின் இமைகள் மூடித் திரையிட்டு என் உருவத்தை மறைப்பதை நான் தடுத்து நிறுத்த முடியாதல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

"கண்ணாடிக்கு எதிரில் நின்றால்தான் உருவம் பிரதிபலிக்கும். தண்ணீர் கலங்காமல் தெளிந்திருந்தால்தான் உருவம் தெரியும். ஆனால் என் கண்கள் திறந்திருந்தாலும் கண்ணிமைகள் மூடியிருந்தாலும் தாங்கள் என்முன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தங்கள் உருவம் எப்போதும் என் கண்களில் பொலிகிறது. இந்த அதிசயத்தின் காரணம் என்னவென்று தங்களால் சொல்ல முடியுமா?" என்று குந்தவை கேட்டாள்.

வந்தியத்தேவனின் மெய் சிலிர்த்தது. தழுதழுத்த குரலில், "தெரியவில்லையே, தேவி!" என்றான்.

"தெரியாவிட்டால் நான் சொல்லுகிறேன். தங்களிடத்திலேதான் அப்படி ஏதோ ஒரு மாய மந்திர சக்தி இருக்கிறது. சோழ குலத்தைப் பழி வாங்க வந்த வயிர நெஞ்சம் கொண்ட நந்தினியின் உள்ளமும் தங்களைக் கண்டு சஞ்சலம் அடைந்து விட்டதல்லவா?"

"சற்று முன் தாங்கள் அமுதினுமினிய வார்த்தை கூறி என்னைப் பரவசப்படுத்தினீர்கள். அதே மூச்சில், அந்தக் கொடிய விஷ நாகத்தின் பெயரை ஏன் சொல்லுகிறீர்கள்?"

"நந்தினியை உள்ளத்தில் நஞ்சுடைய பாம்பு என்று நான் வெறுத்த காலம் உண்டு. இப்போது அவளை நினைக்கும் போது எனக்கு அவள் பேரில் இரக்கந்தான் உண்டாகிறது....."

"நந்தினியிடம் தாங்கள் இரக்கம் கொள்வது சோழ குலத்தை நாசமாக்க வரும் ஆலகால விஷத்திடம் இரக்கங் கொள்வதாகும்."

"ஐயா! சோழ வம்சத்தாருக்குக் குல தெய்வமாகிவிட்ட மந்தாகினி தேவியின் மகள் அவள்! என் அருமைச் சகோதரன் அருள்மொழியைப் பல முறை காப்பாற்றிய தேவியின் மகள் அவள்! என் தந்தையைச் சதிகாரனுடைய வேலுக்கு இரையாகாமல் காப்பாற்றித் தன்னுடைய உயிரைப் பலி கொடுத்த மாதரசியின் மகள் நந்தினி.....!"

"ஆனால் அந்தச் சதிகாரனுடைய வேலை எறியத் தூண்டியவள் அவள்! ஆதித்த கரிகாலருக்கு யமனாக வந்தவள் அவள்! வீராதி வீரராகிய பெரிய பழுவேட்டரையரின் மதியை மயக்கிப் பொம்மையைப் போல் ஆட்டி வைத்தவள்.."

"பெரிய பழுவேட்டரையரின் மதியை மட்டுந்தானா மயக்கினாள்? பார்த்திபேந்திர பல்லவன், கந்தமாறன் முதலியவர்களையும் தன் கைக் கருவி ஆக்கிக் கொண்டாள்! இவையெல்லாம் தெரிந்திருந்தும் அவளை என்னால் வெறுக்க முடியவில்லை. வீர பாண்டியனுடைய மரணத்துக்குப் பழி வாங்கவே இவ்வளவும் செய்தாள்! எடுத்த காரியத்தை நிறைவேற்றுவதில் வெற்றி அடைந்தாள்! வீர மறக் குலத்துப் பெண்! அவள் இப்படியெல்லாம் பயங்கரமான செயல்களில் இறங்குவதற்கு நானும் காரணமாயிருந்தேன் என்பதை நினைத்தால் வருத்தமா யிருக்கிறது. அவளுடைய குழந்தைப் பிராயத்தில் பழையாறையிலிருந்து விரட்டியடித்தோம்."

"நல்ல காரியமே செய்தீர்கள், தேவி! தங்களுடைய நெஞ்சிரக்கத்தின் மிகுதியால் அவள் சோழ குலப் பகைவனுடைய மகள் என்பதை மறந்துவிட வேண்டாம். வீர பாண்டியனுடைய மகள் சோழர் வீட்டில் வளர்ந்து ஆதித்த கரிகாலரைத் திருமணம் புரிந்து கொள்ள நேர்ந்திருந்தால்...."

"மிக்க நன்மையாக முடிந்திருக்கும். இந்த இரண்டு பெருங் குலங்களின் பகைமை தீர்ந்து இரு குலமும் ஒரு குலமாகியிருக்கும். ஆனால் அந்தச் செய்தி உண்மையா யிருக்குமா?"

"எதைக் கேட்கிறீர்கள், தேவி!"

"நந்தினி வீரபாண்டியனுடைய மகள் என்பது உண்மையா யிருக்குமா?"

"நந்தினி அவ்வாறு ஆதித்த கரிகாலரிடம் கூறியதை என் காதினால் நானே

# தேசத்தை முன்னேற்றப்பாதையில் இயக்கிச் செல்லும் சக்கரங்கள்

சக்கரங்கள் பல தொழில்களை இயக்குகின்றன. உதாரணமாக, ரயில்கள் கிராமங்களையும் நகரங்களையும் இணைக்கின்றன; விற்பனைச்சரக்குகளை மார்க்கெட்டுகளுடன் இணைக்கின்றன; நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் மற்றப் பகுதிகளுடன் இணைக்கின்றன. டாடாவின் தண்டவாளங்கள், எஃகுச்சக்கரங்கள் மற்றும் ஆக்ஸில்கள் மக்களையும், பொருள்களையும் இப்பரந்த நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் நடத்திச் செல்லுகின்றன.

நாட்டின் முன்னேற்றத்திற்கான இணைப்புத் துறையில் எஃகு ஈடற்ற முக்கியத்துவம் வகிக்கிறது. உறுதியான உழைப்பு, உபயோகம் மற்றும் பணமுதலீட்டின் முழு மதிப்பையும் கிடைக்க வழி செய்வதில் அது ஈடு இணையற்றது.

அக்காரணத்தினால்தான் நாங்கள் ஏராளமான நேரம், உழைப்பு மற்றும் பணம் இவற்றை டாடாவின் முத்திரையுள்ள பொருள்களை மேலும் மேலும் சீராக்குவதில் செலவிடுகிறோம்.

இந்தியப் பொருளாதாரத்தை சீராக்க ஊக்கமளிப்பது டாடா ஸ்டீல்.

**டாடா ஸ்டீல்**



# போர்ஹென்ஸ் பற்பசையால் தவருது பிரஷ் கொண்டு பல் துலக்கினுல் ஈறு உபாதைகளேயும் பற்சிதைவையும் தடுக்கலாம்

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளே நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கும் போர்ஹென்ஸ் பற்பசையின் அற்புதமான விளேவுகளேப் பாராட்டுகின்றன. அந்தக் கடிதங்களே ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.

"போர்ஹென்ஸ் பற்பசைக்கும், அதை நான் தவறாமல் உபயோகிக்கச் சொன்ன டாக்டருக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்... இதன் விளைவு, எனது 76வது வயதிலும், ஒரே மாதிரியாகப் படிந்துள்ள பளபளப்பான என் பற்கள் ஆரோக்கியமான ஈறுகளில் வலுவாக வேரூன்றியுள்ளன...".

—விபூதி பூஷன் போஸ், கல்கத்தா

"உலகப் புகழ் பெற்ற உங்கள் பற்பசையை என் சிறு பிராயம் முதல் தவறாது உபயோகித்து வருகிறேன். இன்று என்னுடைய ஒவ்வொரு பல்லும் வலுவாக இருக்கிறது ... நான் போர்ஹென்ஸை எல்லா வகையிலும் சிறந்த பற்பசையாகக் கருதுகிறேன், ஏனெனில் அது பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை. அது ஒன்றே போதுமே...!"

—என். என். சட்டர்ஜி, கோயம்புத்தூர்

பற்களைத் தக்க முறையில் பராமரிக்க, இரவிலும் காலேயிலும் போர்ஹென்ஸ் பற்பசையையும், போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத்பிரஷ்ஷையும் உபயோகியுங்கள் ... தவிர, உங்கள் பல் வைத்தியரையும் தவருது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களேயும் ஈறுகளேயும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இந்தப் புத்தகத்தைப்பெற, (தபால் செலவுக்காக) 20 பைசா தபால் தலையை "மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்புக. புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது.

K-6

பெயர் ______________ வயது ______________

முகவரி ______________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் தயவு செய்து கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

90F-182 TAM

கேட்டேன். பெரிய பழுவேட்டரைய ரும் கேட்டார். அதுதான் பெரிய பழு வேட்டரையரின் மனத்தை அடியோடு மாற்றி அவரை ரௌத்ராகாரம் கொள் ளச் செய்தது. அந்தக் கொடிய வார்த்தைதான் இளவரசர் ஆதித்த கரி காலரின் உயிருக்கு யமனாக முடிந்தது!''

''சிறிது யோசியுங்கள்! கரிகாலன் மீது பழி முடிப்பதற்காகவே அவள் அவ் விதம் சொல்லியிருக்கலாம் அல்லவா? வீர பாண்டியனைக் கரிகாலன் கோபத்தி லிருந்து காப்பாற்ற விரும்பிய போது அவளே வேறுவிதமாகக் கூறியிருக் கிறாள். பெற்ற தகப்பனைக் குறித்துக் 'காதலன்' என்று எந்தப் பெண்ணாவது தன் வாயினால் சொல்லி யிருப்பாளா?''

''தேவி! கரிகாலர் அப்போது வெறி கொண்டவராயிருந்தார். அவள் என்ன சொன்னாளோ, இவர் என்னவென்று பொருள் செய்து கொண்டாரோ, யாருக்குத் தெரியும்? கரிகாலர் சொல்லி யதுதானே? அவரே பின்னால் நந்தினி 'என் தகப்பன் வீரபாண்டியன்' என்று சொன்ன போது நம்பிவிட்டாரே? மேலும் வீர பாண்டியன் இறந்த பிறகே அவளுக்கு இது தெரிந்திருக்கலாம். தன் பிறப்பைக் குறித்த உண்மையை அறிவ தற்காக நந்தினி என்னென்ன பிரயத்த னங்கள் செய்தாள் என்பது தங்களுக் குத் தெரியுமே? நள்ளிரவில் அவ ளுடைய அன்னையின் ஆவியைப்போல் நடித்துச் சுந்தர சோழரைப் பைத்தியம் பிடிக்க அடிக்கவில்லையா? அதைத் தங்கள் தோழி பார்த்து மூர்ச்சை அடைந்து விழவில்லையா.....?''

''பாதாளச்சிறையில் மூன்று வருஷங்க ளாக அடைபட்டிருந்து தங்களுடன் விடு தலை அடைந்த பைத்தியக்காரனை ஆழ் வார்க்கடியான் பயமுறுத்திக் கேட்ட போது அவன் சொன்னதும் தங்களுக் குத் தெரிந்திருக்கும்.....''

''தெரியாமலென்ன? நந்தினிக்கும் அவள் சகோதரனுக்கும் தானே தகப் பன் என்று அவன் கூறினான்....''

''அதுவே உண்மையாகவும் இருக்க லாம் அல்லவா?''

''அப்படியானால், சில சமயம் பொய் யும் மிக்க வலிவுடையதாகிறது. அரண்மனைக்குள்ளேயே வளர்ந்து சண்டையென்றால் பயந்து கொண் டிருந்த பழைய மதுராந்தகத் தேவர் தாம் வீர பாண்டியனுடைய மகன் என்று அறிந்ததும் எத்தகைய வீர புருஷர் ஆகிவிட்டார் என்பதைத் தாங்கள் பார்த்திருந்தால் பிரமித்துப் போயிருப்பீர்கள். ஒரு முறை சின்னப் பழுவேட்டரையர் தமது வைரக் கரத் தால் என் தோளைப் பற்றினார். அதை நினைத்தால் இன்னமும் அவர் பிடித்த இடத்தில் எனக்கு வலியுண்டாகிறது. அத்தகைய மகா வீரருடன் நாமெல் லாரும் 'கோழை' என்று எண்ணிய மதுராந்தகன் சரி சமமாக வாட்போர் இட்ட காட்சியை என்றும் நான் மறக்க முடியாது.''

''அதைக் குறித்தே நானும் தங்கள் வார்த்தையில் சந்தேகம் உண்டாகிறது என்று சொன்னேன்.''

''நம்புவதற்கு அரிதான சம்பவம் தான். நந்தினியின் மூடு பல்லக்கில் பிர யாணம் செய்து கொண்டிருந்தவனும், பழுவேட்டரையர்களின் பெயரைச் சொன்னாலே நடுநடுங்கியவனுமான நாம் அறிந்த மதுராந்தகன் சின்னப் பழுவேட் டரையருடன் வாட் போர் செய்யத் துணிவான் என்று யார் நம்ப முடியும்? ஆயினும் அது உண்மையில் நடந்தது என்பதை ஆழ்வார்க்கடியான் திரும்பி வந்து தங்களுக்குக் கூறுவான்.''

''ஐயா! தாங்கள் நந்தினி தேவியைப் பார்க்க முடியவில்லையா?''

''அந்தப் பெண் உருக்கொண்ட ராட் சஸியை நான் ஏன் பார்க்க வேண்டும்?''

''நந்தினியைப் பற்றி இனி அவ்விதம் சொல்ல வேண்டாம். என்றைக்காவது



## அனுராதா – சுபாஷிணி

குமாரி அனுராதா, குமாரி சுபாஷிணி ஆகியோரின் பரதநாட்டிய அரங்கேற்றம் சென்ற 2-ந் தேதி மயிலை பைன் ஆர்ட்ஸ் கிளப்பின் ஆதரவில் மிகக் கோலாகலமாக நடைபெற்றது. ஸ்ரீமதி ஸரஸாவிடம் பயிற்சி பெற்றவர் இவ்விருவரும். நடனங்களில் நல்ல விறுவிறுப்பு. இருவர் சேர்ந்து ஆடுவதற்கு இணைந்து ஆடும் அப்பியாசம் அதிகமாக வேண்டும் என்றாலும் ரசிகர்களின் உற்சாகத்தை ஈர்க்கக்கூடிய பல கட்டங்கள் நிகழ்ச்சியில் இருந்தன. 'பால் வடியும்' கிருதியின் சரணத்திலும், ராதாகிருஷ்ண நடனத்திலும் வர்ணம் என்று குறிப்பிட்டிருந்த ''பச்சை மாமலைபோல் மேனி'' பாசுர ராகமாலிகையிலும், இருவரும் மாறி மாறி ஆடிய நிருத்தியப் பகுதியைக் குறிப்பிடவேண்டும். பின்னணி சங்கீதம் முதல் தரம். சுபாஷிணியின் தாயார் ஸ்ரீமதி சீதா சுப்பிரமணியம் கர்னாடக சங்கீத மேடைக் கச்சேரி செய்யும் வித்வாம்சினி. இடையிலே அவர் பாடிய தாசர் கிருதி அற்புதமாக இருந்தது. இரு சிறுமிகளிடமும் உற்சாகம் ததும்புகிறது. கலை வளருவதற்கு நல்ல பின்னணி.

ஒரு நாள் நானே அவளைச் சந்திப்பேன். உண்மையில் அவளுடைய தந்தை யார் என்னும் இரகசியத்தை அறிவேன். ஆனால் ஒன்று தெரிந்து கொள்ளுங்கள். நந்தினியைப் பற்றி என்னிடம் எதுவும் தவறாகக் கூற வேண்டாம். அவளுடைய தகப்பனார் யாராயிருந்தாலும், அவளுடைய அன்னை யார் என்பதில் சந்தேகமில்லையல்லவா? அவளிடம் நான் அன்பு கொள்வதற்கு அது ஒன்றே போதும். அதற்கு மேலே இன்னொரு முக்கிய காரணமும் இருக்கிறது.....''

''அது என்ன காரணம்?''

''நந்தினி தங்களிடம் பிரியம் கொண்டிருந்தாள். அவளுடைய முத்திரை மோதிரத்தைத் தங்களிடம் கொடுத்தாள். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பிச் செல்வதற்கு உதவி செய்தாள். கொள்ளிடக் கரைக் காட்டில் ரவிதாஸன் கூட்டத்தாரிடம் தாங்கள் சிக்கிக் கொண்டிருந்தபோது மறுபடியும் தங்கள் உயிரைக் காப்பாற்றினாள்....''

''கடைசியாக, ஆதித்த கரிகாலரைக் கொன்ற பயங்கரமான பழியை என் பேரில் சுமத்தினாள். அதற்காகவே அத்தனை சூழ்ச்சிகளும் செய்தாள்!''

''ஏன் அப்படிச் செய்தாள் என்று தங்களுக்குத் தெரியவில்லையா ?''

''பாம்பு ஏன் கடிக்கிறது என்பதற்குக் காரணம் சொல்ல வேண்டுமா ? சிறுத்தை ஏன் பாய்கிறது என்பதற்குக் காரணம் கூற வேண்டுமா ?''

''நந்தினி பிறக்கும்போதே பாம்பாகவோ, சிறுத்தையாகவோ பிறக்கவில்லை. நாங்கள்தான் அவளை அப்படிச் செய்து விட்டோம். சந்தர்ப்பங்கள் அவ்விதம் சதி செய்து விட்டன. தாங்களும் அதற்குக் காரணமாயிருந்தீர்கள்.''

''ஐயையோ! என் பேரில் ஏன் வீண் பழி? நான் அவளுக்கு அப்படி என்ன தீங்கு செய்தேன் ?''

'' தாங்கள் அவளுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை ; அவள்தான் தங்களிடம் அன்பு கொண்டிருந்தாள்.''

''தெய்வமே!....''

''புருஷர்கள் சில காரியங்களில் கண்ணிருந்தும் குருடர்களாயிருப்பார்கள் போலிருக்கிறது. ஐயா ! இதைக் கேளுங்கள் ! நந்தினியின் உள்ளம் தங்களுக்குத் தெரியவில்லை; நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன். அந்தத் துர்ப்பாக்கியசாலி உண்மையில் வீரபாண்டியனிடம் அன்பு கொண்டிருக்கவில்லை ; பெரிய பழுவேட்டரையரிடம் அன்பு கொண்டிருக்கவில்லை. ஆதித்த கரிகாலனிடம் அவளுக்கு உண்மையான நேசம் கிடையாது. அவர்களிடம் அன்பு கொண்டதாக நடித்ததெல்லாம் அவள் அரசு பீடத்தில் அமர்வதற்காகத்தான் !''

''இதை நானும் அறிவேன், தேவி! அவளுடைய கிராதக நெஞ்சில் அன்புக்குச் சிறிதும் இடமே இல்லை!''

''அது தவறு ; தங்களைக் கண்ட போதுதான் அவள் உள்ளத்தில் உண்மையான அன்பு உதயமாயிற்று. தங்கள் அபிமானத்தைக் கவர்வதற்காக அவள் எதுவும் செய்யச் சித்தமாயிருந்தாள்..''

''என்பேரில் இளவரசரைக் கொன்ற பழியைச் சுமத்தவும் சித்தமாயிருந்தாள்.''

''அது எதற்காக? தங்களை என்றென்றைக்கும் சோழ குலத்தாருடன் நட்பும் உறவும் கொள்ளாமலிருக்கச் செய்வதற்குத்தான்....''

''அதற்காக என்னைத் தஞ்சாவூர் இராஜ வீதிகளின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றச் செய்வதற்கு ஏற்பாடு செய்து விட்டாள். அதைவிட அவளுடைய கையில் பிடித்திருந்த கத்தியினாலேயே என்னைக் கொன்றிருக்கலாமே?''

''தங்களைக் கொல்ல எண்ணியிருந்தால் அவ்விதம் செய்திருக்கலாம். அல்லது ரவிதாஸன் கூட்டத்தைக் கொண்டு தங்களைக் கொல்லச் செய்திருக்கலாம். பெரிய பழுவேட்டரையர் குற்றத்தைத் தம் பேரில் போட்டுக் கொண்டிராவிட்டால், பொன்னியின் செல்வர் குறுக்கிட்டிராவிட்டால், தங்களை உண்மையிலேயே கழுவில் ஏற்றக் கட்டளை பிறப்பித்திருந்தால், ரவிதாஸன் கூட்டத்தார் வந்து தங்களை விடுவித்துக் கொண்டு போயிருப்பார்கள். தாங்களும் ஒரு வேளை இன்று ஆனைமலையின் மேல் சேர்ந்திருக்கும் கூட்டத்துடன் கலந்துகொண்டிருந்தாலும் இருப்பீர்கள்.''

''அத்தகைய விபத்து நேராமல் கடவுள்தான் என்னைக் காப்பாற்றினார்.''

''சோழநாட்டையும் காப்பாற்றினார். தங்களைப்போன்ற ஒரு வீரரின் சேவை சோழ சாம்ராஜ்யத்துக்கு நஷ்டமாகாமல் காப்பாற்றினார்.....''

''தேவி! சோழ சாம்ராஜ்யம் மகத்தானது. ஐந்நூறு லட்சம் வீரர்களின் வாள்களும் வேல்களும் இந்த ராஜ்யத்தைக் கண் போலக் காத்து நிற்கின்றன. நான் ஒருவன் இதன் உதவிக்கு அவ்வளவு அவசியமாயிருக்க முடியாது...''

''சோழநாட்டை நாலாபுறமும் புதிய அபாயங்கள் சூழ்ந்து கொண்டிருப்பதாகத் தாங்களே சொன்னீர்கள்.''

''அது உண்மைதான், தேவி! ரவிதாஸனுடைய சூழ்ச்சித் திறன் அதிசய



ஆர். வெங்கடராமணி அய்யர்
தோற்றம்:3-7-1901 மறைவு:17-12-1971

## கும்பகோணத்தின் பிரபல வழக்கறிஞர் மறைவு

கும்பகோணம் வக்கீல் சங்கத்தின் தலைவர் கும்பகோணம் ஸிட்டி யூனியன் பாங்கியின் சேர்மன் திருவலம்-சுழி வைத்தியலிங்கம் பிள்ளை தர்மஸ்தாபனத்துக்கு சுமார் இருபது வருஷங்களாக மானேஜிங் டிரஸ்டியாகச் சிறப்புப்பணி ஆற்றியுள்ளார். கும்பகோணம் ஓரியண்டல் உயர்நிலைப்பள்ளியின் (சம்ஸ்கிருதம்) ஸ்தாபகரும், அதன் கரஸ்பாண்டெண்டாகவும் அரும் சேவை செய்துள்ளார். கோபால்ராவ் பொது நூலகத்தின் காரியதரிசியாகவும், அத்வைத சபாவின் அங்கத்தினராகவும் பல தர்ம ஸ்தாபனங்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்திருக்கிறார். காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகளிடம் அதிக பக்தியுள்ளவர். அய்யர் எளிமையும் அடக்கமும் உருவானவர். அவரது பிரிவால் வருந்தும் மனைவியாருக்கும் நான்கு புதல்வர்களுக்கும் நான்கு புதல்விகளுக்கும் எமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

மானது. பாண்டிய நாட்டுச் சிங்காதனத்துக்கு உரிமையாளர் இரண்டு பேரை உண்டாக்கிவிட்டான். முன்னே ஒரு சிறு குழந்தைக்குக் கொள்ளிடக் கரைக் காட்டில் பாண்டிய மன்னன் என்று பட்டம் சூட்டினான். அந்தப் பராங்குசன் நெடுஞ்செழியனுடன் இப்போது அமரபுஜங்கன் நெடுஞ்செழியன் ஒருவனும் சேர்ந்துவிட்டான்....''

''அது யார் அமரபுஜங்கன் நெடுஞ்செழியன் ?''

''நம் பழைய மதுராந்தகனின் பெயர் இப்போது அதுதான். பாண்டிய அரசுக்கு உரிமை கொண்டாடுவோன், 'மதுராந்தகன்' என்ற பெயருடன் இருக்க முடியாதல்லவா ? சின்னப் பழுவேட்டரையர் அருவிப் பள்ளத்தில் விழுந்ததும், மலை உச்சியில் 'பாண்டியன் அமர புஜங்கன் நெடுஞ்செழியன் வாழ்க!' என்று எழுந்த கோஷம் அந்தப் பெரிய அருவி விழும் சத்தத்தையும் அடக்கிக் கொண்டு எழுந்தது.''

''இம்மாதிரி இரண்டு உரிமையாளரை ஏற்படுத்தி வைப்பதில் ரவிதாஸனின் கூட்டத்தாருக்கு என்ன லாபம் ?''

''ஒருவனுக்கு ஏதாவது நேர்ந்தால் இன்னொருவன் கையில் இருக்கட்டும் என்றுதான். ஒருவனைக் கொண்டு இலங்கை அரசன் மகிந்தன் உதவியைப் பெறவும், இன்னொருவனைக் கொண்டு சேர மன்னனின் கூட்டுறவைப் பெறவும் அக்கூட்டத்தார் முயற்சிசெய்வார்கள்.''

''ஐயா ! என் சகோதரனும் தாங்களும் சேர்ந்து சதி செய்து உத்தமச் சோழரின் தலையில் மணி மகுடத்தைச் சூட்டினீர்கள். உத்தமச் சோழருக்குப் பெரிய நன்மை செய்துவிட்டதாக நான் கருதவில்லை. தற்சமயம் சோழசாம்ராஜ்யத்தின் பாரத்தை வகிப்பது அவ்வளவு எளிய காரியமாகத் தோன்றவில்லை...''

''சோழ சாம்ராஜ்ய பாரத்தை வகிப்பது தற்சமயம் மிகப் பிரயாசையான காரியந்தான். ஆனால் அதை உத்தமச் சோழரா தாங்கப் போகிறார்? அவர் தமது அன்னைக்கு உதவியாக ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டுக் காலங் கழிக்கப் போகிறார். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கப் போகிறவரும் பாதுகாக்கப் போகிறவரும் தங்கள் தம்பி அருள்மொழித் தேவர்தான் !''

''அது உண்மையே. அருள்மொழிக்கு அதற்கு ஆற்றலும் உண்டு. ஆனாலும் அவன் பிராயத்தில் சிறியவன்; அநுபவம் இல்லாதவன். சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கி வந்த இரு பெரும் வைரத் தூண்கள் — பழுவூர் அரசர்கள் — போய் விட்டார்கள். பெரியவர் நம்மைவிட்டே



அமெரிக்காவில் தற்கொலை செய்துகொள்ள முடிவு செய்த ஒருவர் கடலை நோக்கி ஓடினார். தண்ணீரிலும் இறங்கி விட்டார்... ஆனால் கடைசியில் தற்கொலை செய்து கொள்ளாமல் திரும்பி விட்டார். காரணம், கடல் நீர் மிகவும் ஜில்லென்று இருந்ததாம்!

மதர்லாண்ட் - 'கரிகாலன்'

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சென்று விட்டார் ! தாங்கள் சொல்வதைப் பார்த்தால், சின்னப் பழுவேட்டரையர் பிழைத்து வருவதும் துர்லபம் என்று தோன்றுகிறது....''

''அவர் பிழைத்து வந்தாலும் இராஜ்யத்துக்குப் பயன்பட மாட்டார். தமது மகளையும் மருமகனையும் நினைத்து நொந்து கொண்டிருப்பார்....''

''சம்புவரையரும் அதே நிலையை அடைந்து விட்டார். சில தினங்களில் அவருடைய உள்ளமும் உடலும் சோர்ந்து பலவீனமடைந்து விட்டன. மலையமான் முன்னமே முதுகிழவர். தமது பேரர்களில் ஒருவன் இறந்து இன்னொருவனுக்குப் பட்டமில்லை என்று ஆனதும் அவரும் அடியோடு தளர்ந்து போனார். கொடும்பாளூர்ப் பெரிய வேளாரின் மனம் ஒரு நிலையிலில்லை. அருள்மொழி முடிசூட்டிக் கொள்ளப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்து கடைசி நிமிஷத்தில் தம்மை ஏமாற்றி விட்டதை அவரால் மன்னிக்க முடியவில்லை. வானதியை அருள்மொழிவர்மன் மணந்ததில்கூட அவருக்குத் திருப்தி ஏற்படவில்லை. இனி மேல் இராஜ்ய விவகாரங்களில் தாம் தலையிடுவதில்லை என்றும் கொடும்பாளூரில் ஆலயத் திருப்பணி செய்யப் போவதாகவும் கூறிவிட்டுப் போய்விட்டார். கடம்பூர் மாளிகையில் நடந்த சதிக் கூட்டத்தில் கலந்து கொண்ட மற்றச் சிற்றரசர்கள் அனைவரும் அவர்கள் ஒன்று நினைக்கக் காரியம் வேறாக முடிந்தது பற்றி வெட்கி மனங் குன்றிப் போனார்கள். ஐயா ! அருள்மொழிக்கு உதவி செய்யத் துணைவர்கள் வேண்டும். வாள் வலி — தோள் வலியுடன் அறிவுத் திறமையும் வாய்ந்த உற்ற நண்பர்கள் அவனுக்கு வேண்டும்.....''

''நல்லவேளையாகப் பல்லவப் பார்த்திபேந்திரர் இருக்கிறார்!'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

''அவருடைய துணை வலியும் அருள்மொழிக்குக் கிடைக்கும் என்று சொல்வ

தற்கில்லை. அவரை ஊரை விட்டு அனுப்பிவிட்டு உத்தமச் சோழருக்கு முடிசூட்டியதில் அவருக்குக் கோபம். அதைக் காட்டிலும், அருள்மொழி தன் அந்தரங்கத் தோழராகத் தங்களைப் பாவிப்பது அவருக்குப் பிடிக்கவில்லை..''

''அவருடைய கோபத்துக்கு நியாயம் இருக்கிறது. சோழ குலத்துக்கு அவர் எவ்வளவோ தொண்டு செய்திருக்கிறார். நானோ புதிதாக வந்தவன். அவரிடம் நான் வேணுமானால் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்.''

குந்தவை சிறிது யோசித்து விட்டு, ''அது எரிகிற தீயில் எண்ணெய்விட்டது போலாகும்'' என்று கூறினாள்.

''பார்த்திபேந்திரர் மகாவீரர். அவரைச் சமாதானப்படுத்துவதற்கு வேறு வழி இல்லையா?'' என்றான் வந்தியத்தேவன்.

''அவரே அந்த வழியைக் குறிப்பிட்டார். என் தந்தையிடமும் தமது விருப்பத்தைத் தெரிவித்தார்.....''

''பார்த்திபேந்திரப் பல்லவருடைய விருப்பத்தை நிறைவேற்றச் சக்கரவர்த்தி மறுத்திருக்க மாட்டார்....''

''ஆனால் அது சக்கரவர்த்தியைப் பொறுத்ததல்ல. அவருடைய மகளைப் பொறுத்தது. அவருடைய மகள் அதை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டாள்! ஆம், ஐயா! சிவாலயத்துக்கு மலர் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தவர் திடீரென்று சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடிக்கொண்டதைப் பார்த்துப் பல்லவகுலத் தோன்றலுக்குப் பொறுக்கவில்லை. கடலில் படகுவிட்டுக் கொண்டிருந்தவன் சிங்காதனம் ஏறியதும் அவருக்குச் சகிக்கவில்லை. பழைய பல்லவ நாட்டுக்குத் தன்னைச் சுதந்திர மன்னனாக்கிச் சிலாசாஸனம் எழுதும் உரிமை அளிக்க வேண்டும் என்று கேட்டார்..''

''ஆகா! அது எப்படிக் கொடுக்க முடியும்? சோழ ராஜ்யத்தைச் சின்னாபின்னப் படுத்துவதாகுமல்லவா?''

''அந்த உரிமை கொடுக்க என் தந்தை சம்மதித்து விட்டார். அத்துடன் பல்லவ குமாரர் நிற்கவில்லை. முன்னொரு சமயம் பல்லவ அரசகுமாரி சோழ குமாரன் ஒருவனை மணந்து கொண்டாளாம். அதற்கு ஈடாகச் சுந்தர சோழரின் குமாரியைத் தமக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று கோரினார்.''

இதைக் கேட்டதும் வந்தியத்தேவனின் முகம் மிக்க மன வேதனையைக் காட்டியது. அதை மறைத்துக் கொள்வதற்காக அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

குந்தவையின் முகம் புன்சிரிப்பால் மலர்ந்தது. வேண்டுமென்றே அவள் மேலே ஒன்றும் சொல்லாமலிருந்தாள்.

சற்றுப் பொறுத்து வந்தியத்தேவன் ''அதற்குச் சக்கரவர்த்தி என்ன விடை கூறினார்?'' என்றான்.

''அதற்குச் சக்கரவர்த்தி எப்படிப் பதில் கூற முடியும்? அது அவர் மகள் விருப்பத்தைப் பொறுத்ததல்லவா? சக்கரவர்த்தி தம் மகளைக் கேட்டார்..''

''சக்கரவர்த்தித் திருமகள் அதற்கு என்ன பதில் கூறினார்?''

''பார்த்திபேந்திரனைக் கைப்பிடிக்கச் சம்மதமில்லை என்று சொல்லி விட்டார்!''

''ஏன்? ஏன்?'' என்று வந்தியத்தேவன் கேட்ட குரலில் அடங்காத ஆர்வம் ததும்பியது.

''சக்கரவர்த்தித் திருமகள் காரணம் எதற்காகச் சொல்ல வேணும்? இருந்தாலும், ஒரு காரணம் கூறினாள். தெய்வப் பொன்னி நதி பாயும் புனல் நாட்டை விட்டு, வெளிநாட்டுக்குப் போக விருப்பமில்லை என்று கூறினாள்.''

''அது ஒன்றுதானா காரணம்?''

''வேறு காரணமும் இருக்கலாம். அதில் சிரத்தை உள்ளவர்களுக்கு அல்லவா சொல்ல வேணும்? ஏனோதானோ என்று கேட்பவர்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?'' என்றாள் குந்தவை.

''தேவி! அளவில்லாத சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் கேட்கிறேன்.''

''அவ்வளவு சிரத்தையும் ஆர்வமும் உள்ளவர்கள் தாங்களாகவே அதைத் தெரிந்து கொள்வார்கள். அவர்களுக்குச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.''

குந்தவையின் முகத்தை அப்போதுதான் முதன் முதலில் பார்ப்பவன்போல் வந்தியத்தேவன் பார்த்தான்.

மின்னலை மின்னல் தாக்கியது. அலையோடு அலை மோதியது. சொர்க்கம் பூமிக்கு வந்தது. மண்ணுலகம் விண்ணுலகம் ஆயிற்று.

விழிக்கோணத்தில் விஷமப் புன்சிரிப்புடன் குந்தவை, ''ஒரு பெண்ணின் மனத்தில் உள்ளதை அறிய முடியாமல் அவள் வாயினால் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கும் ஆண்மகனைப் பற்றி என்னவென்று நினைப்பது? சோழ சாம்ராஜ்யத்தின் பகைவர்களுடைய தந்திர சூழ்ச்சிகளையெல்லாம் அவர் அறிந்து கொள்ள முடியும் என்று எவ்விதம் எதிர்பார்ப்பது?'' என்றாள்.

வந்தியத் தேவன் சற்று நேரம் மேலும் கீழும் பார்த்துவிட்டு, ''தேவி!

பழம்பெரும் பல்லவ குலத்தில் வந்த பார்த்திபேந்திரன் கோரிய அதே கோரிக்கையைத் தங்குவதற்கு ஒரு குடிசை நிழலும் இல்லாத அநாதை வாலிபன் ஒருவன் வெளியிட்டால் அதைப் பற்றிச் சக்கரவர்த்தி என்ன நினைப்பார்?'' என்றான்.

''அவர் என்ன நினைத்தாலும், தம் மகளுடைய விருப்பம் என்னவென்று கேட்பார்; அதன்படியே பதில் சொல்வார்.''

''தேவி! சக்கரவர்த்தியின் திருக்குமாரி என்ன பதில் சொல்லுவாள்?''

''இப்படிச் சுற்றி வளைத்துக் கேட்டுக் கஷ்டப்படுவானேன்? சக்கரவர்த்தியிடம் நேரில் கேட்டுப் பார்த்துவிடலாமே? பதில் உடனே தெரிந்துவிடுகிறது!'' என்றாள் குந்தவை.

''அது எப்படிக் கேட்க முடியும்? ஈழம் முதல் வேங்கி வரையில் ஒரு குடை நிழலில் ஆளும் மன்னர் மன்னரின் திருமகளைத் தனக்கு மணம் செய்து கொடுக்கும்படி ஊரும் பேரும் இல்லாத வாலிபன் — உற்றார் உறவினர் அற்ற அநாதைச் சிறுவன் — எப்படித் துணிந்து கேட்க முடியும்?'' என்றான் வல்லவரையன்.

''வாணர் குலத்தில் பிறந்த வீரருக்கு இவ்வளவு தன்னடக்கம் எங்கிருந்து வந்தது? முதன் முதலில் தாங்கள் என்னைப் பார்த்தபோது தங்கள் குலப் பெருமை பற்றிக் கூறியதை நான் மறந்து விடவில்லை. சேர சோழ பாண்டியர்களின் அரண்மனைகளில் ஆண் குழந்தைகள் பிறந்தால், அக் குழந்தையின் மார்பு அகலமாயிருந்தால், மாவலி வாணனின் பெயர்கள் எல்லாவற்றையும் அந்தக் குழந்தையின் மார்பில் எழுதலாம் என்று அரசிமார்கள் களிப்படைவார்கள் என்றீர்கள். வாணர் குல மன்னரின் அரண்மனை வாசலில், மூவேந்தர்களும் காத்திருப்பார்கள் என்றும், புலவர்கள் அம்மன்னரிடம் பெற்றுப் போகும் பரிசுகளைப் பார்த்து, 'இது என் குதிரை, இது என் யானை! இது என் கிரீடம்! இது என் குடை!' என்று அவர்கள் பேசிக்கொள்வார்கள் என்றும் சொன்னீர்கள். அவ்வாறு பெருமையடித்துக் கொண்டவர் இவ்வளவு அடக்கம் கொண்டவரானது ஏன்?''

''தங்கள் தம்பியின் சிநேகம்தான் அதற்குக் காரணம். பழைய குலப் பெருமையைக் கூறிச் சிறப்படையப் பார்ப்பதை அருள்மொழி வர்மர் வெறுக்கிறார். சூரிய குலத்தில் தோன்றியவர்கள் என்றும், கரிகால் வளவன் வம்சத்தினர் என்றும், விஜயாலய சோழரின் பேரரின் பேரர் என்றும் பெருமையடித்துக் கொள்வதை நினைத்து அவர் சிரிக்கிறார். ஒரு நாள் அவர் என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா? 'என் குலத்து முன்னோர்கள் இதுவரையில் செப்புப் பட்டயமும் சிலா சாஸனமும் எழுதுவிக்கும்போதெல்லாம் சூரிய வம்சத்திலிருந்தும் மனுநீதிச் சோழனிலிருந்தும் சிபிச் சக்கரவர்த்தியிலிருந்தும் தொடங்கி எழுதச் செய்து வந்திருக்கிறார்கள். நான் அரச பீடம் ஏறினால் இந்த வழக்கத்தை மாற்றி விடுவேன். நான் எழுதுவிக்கும் சிலாசாஸனங்களிலும் செப்புப் பட்டயங்களிலும் என்னுடைய சாதனைகளை மட்டும் பொறிக்கச் செய்வேன். அப்போது அச் சாஸனங்கள் புனைந்துரைகளோ என்ற ஐயத்துக்கு இடந்தராத மெய்க்கீர்த்தியாக விளங்கும்!' என்றார். தேவி! நானும் அவருடைய கருத்தை ஒப்புக் கொண்டேன். பழைய குலப் பெருமை பேசுவதை விட்டுவிட உறுதி கொண்டேன். தங்கள் தந்தையாரிடம் சென்று என் பழைய குலப் பெருமைகளைக் கூறித் தங்கள் கரம் பிடிக்கும் பாக்கியத்தைக் கோர மாட்டேன். அருள்மொழி வர்மரும் நானும் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மைக்கு எங்கள் ஆயுளை அர்ப்பணித்திருக்கிறோம்.. வடக்கே விந்திய பர்வதத்திலும் தெற்கே திரிகோண மலையிலும் மேற்கே லட்சத் தீவிலும் கிழக்கே கடல்களுக்கு அப்பாலுள்ள சாவகத்திலும் கடாரத்திலும் காம்போஜத்திலும் புலிக் கொடியைப் பறக்கச் செய்யத் தீர்மானித்திருக்கிறோம். நாங்கள் மேற்கொண்ட காரியங்களை ஓரளவேனும் சாதித்த பிறகு சுந்தர சோழ சக்கரவர்த்தியிடம் சென்று, 'இதோ நான் அணிந்து வந்திருக்கும் வெற்றி மாலைகளைத் தங்கள் திருக் குமாரியின்



'''ஐ லவ் யூ'ன்னு என்ன அர்த்தம்னு என் அண்ணன் உங்களிடம் கேட்டுண்டு வரச் சொன்னார்.''

''எனக்குத் தெரியாது. என் பாட்டியிடம் கேள், சொல்வாள்.''

கழுத்தில் கூட அநுமதி கொடுங்கள்!' என்று விண்ணப்பித்துக் கொள்வேன். இலங்கைக்குச் சென்று மகிந்தனை வென்று பாண்டியன் மகுடத்தையும் இந்திரன் ஹாரத்தையும் கொண்டு வந்து இளவரசியின் முன்னால் வைப்பேன். வைத்து விட்டு, 'தங்கள் திருக் கரத்தைப் பிடிப்பதற்கு நான் தகுதியுள்ளவனானால் அந்தப் பாக்கியத்தை எனக்கு அளியுங்கள்!' என்று பெருமையோடு கேட்பேன்....''

''ஐயா! தங்கள் தீர்மானத்தை நான் பாராட்டுகிறேன். தங்களுக்கும் பார்த்திபேந்திரர் மனப் போக்குக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டு வியந்து மகிழ்கிறேன். ஆனால் ஆண் பிள்ளையாகிய தாங்கள்தான் இவ்வாறெல்லாம் செய்யலாம். வெற்றிகளையும் சாதனைகளையும் கொண்டு வந்து சமர்ப்பிக்கலாம். அவற்றைக் குறித்துப் பெருமைப் படலாம். பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு இவை யொன்றும் சாத்திய மில்லை. அவர்களுக்குத் தேவையும் இல்லை. அரச குலத்துப் பெண்களுக்குச் சுயம்வரம் நடத்தும் பழக்கம் நம் தேசத்தில் வெகு காலம் இருந்து வந்தது. இப்போது ஏனோ மறைந்து விட்டது. ஐயா! என் தந்தை எனக்கு ஒரு சுயம் வரம் நடத்தி அதற்கு இந்தப் பரந்த பாரத தேசத்தில் உள்ள அத்தனை அரசகுமாரர்களையும் அழைத்திருந்தாரானால் என் கையில் உள்ள மாலையை அவர்கள் யாருடைய கழுத்திலும் போட்டிருக்க மாட்டேன். தஞ்சைக் கோட்டையிலிருந்து தப்பி ஓடிவந்து பழையாறை ஆலய பட்டரின் துணையுடன் ஓடமேறி ஓடையைக் கடந்து அரண்மனைத் தோட்டத்துக்குள் புகுந்து என்னைத் தனிமையில் சந்தித்த அநாதை வாலிபர், அத்தனை அரசகுமாரர்களுக்கு மத்தியில் எங்கேயாவது இருக்கிறாரா என்று தேடுவேன். அவருடைய கழுத்திலேதான் என் கையில் உள்ள சுயம்வர மாலையைப் போடுவேன்!''

**வ**ந்தியத்தேவனுடைய செவிகளில் ஆயிரம் கிண்கிணிகள் ஒலித்தன. வானத்திலிருந்து பொன் மழை பொழிந்தது. தளிர்களும் மலர்களும் குலுங்கிய மரங்களின் உச்சியில் வர்ணப் பட்டுப் பூச்சிகள் இறகுகளை விரித்து நடனம் புரிந்தன.

இதுவரையில் உட்கார்ந்திருந்த வந்தியத் தேவன் எழுந்து நின்றான்.

''நான் கூறியது தங்களுக்குப் பிடிக்க வில்லையா?'' என்றாள் குந்தவை.

''நன்றாய்க் கேட்டீர்கள். நான் விழித்திருக்கிறேனா, என் காதில் விழுந்ததெல்லாம் உண்மையா, அல்லது கனவு காண்கிறேனா என்று சோதித்தேன். கனவு காணவில்லை, உண்மைதான் என்று தெரிந்து கொண்டேன். பாற்கடலைக் கடைந்து தேவர்கள் அமுதத்தை அடைந்தார்கள், அதை அருந்தி அமரரானார்கள் என்று கேட்டிருக்கிறேன். தாங்கள் இப்போது கூறிய மொழிகள் என்னை அமுத முண்டவனாகச் செய்து விட்டன; எனக்குப் புத்துயிர் அளித்து விட்டன!''

குந்தவை அப்போது, ''ஐயா! ஒன்று மாத்திரம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் போகுமிடங்களில் எத்தனையோ அபாயங்களுக்கு உட்படுவீர்கள். எவ்வளவோ போர்க்களங்களில் போர் செய்வீர்கள். பகைவர்கள் வஞ்சகச் சூழ்ச்சியால் தங்களை மேலுலகம் அனுப்ப முயற்சி செய்வார்கள். அப்படி ஏதாவது தங்கள் உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால் இந்தத் தொல் பெருமை வாய்ந்த சோழ குலத்தில் பிறந்த ஓர் இளவரசி கல்யாணம் ஆவதற்கு முன்னாலேயே கைம்பெண் ஆவாள். இதை மறந்து விடாதீர்கள்!''

''தேவி! அப்படி ஒன்றும் நிச்சயம் நேராது. நான்தான் அமுதமுண்டு அமரனாகிவிட்டேனே! எனக்கு இனி மரணம் இல்லை! கன இருள் சூழ்ந்த வனாந்தரங்களில் காற்றும் மழையும் கடுகிப் பெய்து நான் திசை தெரியாமல் தடுமாறும் சமயங்களில், தாங்கள் அக்காட்டு மத்தியில் உள்ள வீட்டில் பலகணிக்கு அருகில் விளக்கேற்றி வைத்துக் கொண்டு எனக்காகக் காத்திருப்பீர்கள். அந்த நினைவு எனக்குத் தைரியமளித்துக் காற்று மழைகளுந்தகாரத்திலிருந்து தப்புவதற்குத் துணை செய்யும். அலை கடலின் நடுவில் மரக் கலத்தில் ஏறி நாளும் வாரமும் மாதமும் கணக்கு மறந்து திக்குத் தெரியாமல், மதிமயங்கிக் கதி கலங்கி நிற்கும்போது ஸப்தரிஷி மண்டலத்தின் அடியில் என்றும் நிலைத்து நின்று சுடர் விட்டு வழிகாட்டும் துருவ நட்சத்திரமாகத் தாங்கள் ஒளி வீசுவீர்கள். நான் திசை அறிந்து என் மரக்கலத்தைத் திருப்பிக் கொண்டு வருவேன். கடற்கரை ஓரத்துப் பாறைகளில் மாமலைகள் போன்ற பேரலைகள் தாக்கிக் கடல் கொந்தளித்துக் கொண்டிருக்கும் இரவு நேரங்களில் கலங்கரை விளக்கிலிருந்து வரும் உயிர் காக்கும் ஒளியாகத் தாங்கள் பிரகாசிப்பீர்கள். அந்தப் பிரகாசத்தைக் கொண்டு என் படகு பாறையில் மோதாமல் கரையிலே கொண்டு வந்து சேர்ப்பேன். புல்லும் பூண்டும்

முளையாத அகண்டமான பாலைவனப் பிரதேசத்தில் வடவைக் கனல் எனக் கொளுத்தும் வெய்யிலில் அனல் பிழம்பெனச் சுட்டுப் பொசுக்கும் மணலில் நான் தாகத்தினால் நா உலர்ந்து வியர்வைக் கால்கள் வறண்டு தவித்துத் தத்தளிக்கும் நேரங்களில் தென்னை மரங்களும் தேன் கதலிகளும் சூழ்ந்த ஜீவநதி ஊற்றாகத் தாங்கள் எனக்கு உதவுவீர்கள்! தேவி! இந்த விரிந்து பரந்த உலகத்தில் நான் எங்கே போனாலும் எத்தனை கஷ்டங்களுக்கு உட்பட்டாலும் ஒரு நாள் கட்டாயம் திரும்பி வருவேன். திரும்பி வந்து தங்களைக் கரம் பிடித்து மணந்து கொள்வேன். என் இந்த மனோரதம் நிறைவேறும் வரையில் என்னை யமன் நெருங்க மாட்டான். அமுதமுண்ட அமரனாக இருப்பேன்!''

இவ்விதம் வந்தியத் தேவன் தன் வாழ்க்கையில் என்றும் பேசி அறியாதவாறு பேசிவிட்டு உட்கார்ந்தான்.

இளைய பிராட்டி மெய் மறந்து அவன் முகத்தைப் பார்த்த வண்ணமிருந்தாள். இந்த வார்த்தைகளை யெல்லாம் இந்த வீரன் முதன் முறையாகத் தன்னிடம் சொல்லவில்லை யென்றும், எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முற்பட்ட யுக யுகாந்தரங்களில் எவ்வளவோ தடவை இதே சொற் பிரவாகத்தை இவனிடம் கேட்டிருப்பதாகவும் அவளுக்குத் தோன்றியது. இந்தச் சித்தப் பிரமையின் விசித்திரத்தைப் பற்றி அவள் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, ''அக்கா! அக்கா!'' என்ற வானதியின் குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

வானதி விரைந்து அவர்கள் அருகில் வந்து, ''அக்கா! இவருக்கு ஓர் அவசர ஓலை வந்திருக்கிறது. மணிமேகலையின் தமையன் கந்தமாறனிடமிருந்து வந்திருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே ஓலையை நீட்டினாள்.

(அடுத்த இதழில் முடியும்)

# திருட வந்தவர்கள் .....!

போர்வைக்குள்ளே முடங்கிக் கிடந்த அவளுக்கு யாரோ உலுக்கி எழுப்பி விட்டதுபோல் தூக்கம் கலைந்து விழிப்புக் கொடுத்துவிட்டது...! சே சே! இரவு வேளையில் தூக்கம் கலைந்து விட்டால் இலேசில் மறுபடியும் தூக்கம் வருகிறதா...?

உறங்க மறுத்த கண்கள் சண்டித்தனம் செய்ய, வீட்டுக்குள்ளேயே சற்று உலாவினால்தான் தூக்கம் வரும் என்று, போர்வையை உதறி விட்டு எழுந்தவள் திரும்பிக் கணவனைப் பார்த்தாள்! நல்ல நித்திரையில் இருந்தார் அவர்! எழுப்ப மனம் வரவில்லை. எழுந்தவள் 'பெட் ரூம்' விளக்கைச் சற்றுப் பெரிதாக்கி விட்டுத் தெருக் கதவுப் பக்கம் வந்தாள். தாழ்ப்பாளில் கைவைத்து நீக்கிக் கனத்த அந்தக் கதவைச் சற்றே திறந்தவள், வெலவெலத்துப் போய் நின்று விட்டாள். வெளியே —

கதவுக்கு அப்பால் சிறிது தூரத்தில் இருளோடு இருளாகக் கறுப்புப் போர்வை போர்த்துக் கொண்டு கையில் தடியுடன் இரண்டு உருவங்கள் நிற்பது மங்கிய தெரு விளக்கு வெளிச்சத்தில் தெரிந்தது. மின்சாரம் பாய்ந்தது போன்ற அதிர்ச்சி தலையோடு கால் ஓடியது. ரத்த ஓட்டமே திடீர் என்று ஸ்தம்பித்து விட்டாற்போல் ஓர் உணர்ச்சி. கத்த இயலாமல் உதடுகள் ஒன்றோடு ஒன்றாக ஒட்டிக் கொண்டு விட்டது போன்ற பிரமை.

கையிலும், கழுத்திலும் மின்னும் நகைகளை நடுங்கும் கைகள் அவசர அவசரமாகப் புடவைத் தலைப்பால் மறைத்துக் கொள்ள விரைய.., உருவங்கள் முன்னேற முனைய... அந்த நேரம் —

உர்.. உர்... குர்... உர்.. ர்.. ர்...

இருளைக் கிழித்துக் கொண்டு புறப்பட்ட ஒலியில் உருவங்கள் தடுமாறி நின்றன. பின் வாங்கின...

அது என்ன உறுமல்...? நாயின் உறுமல் தானா..? தைரியத்தை வரவழைத்துக் கொண்டு எச்சரித்தாள் அவள் அவர்களை—''வாசற்படியைத் தாண்டி உள்ளே வந்தீங்களோ எங்க ஜிம்மி உங்களை உயிரோட விடாது. தெரிஞ்சுக்குங்க...! அது எழுந்து வரதுக்குள்ளே ஓடிடுங்க...!'' அவ்வளவு தான்! தடதடவென்ற ஓசைகள் அவள் காதில் தேனைப் பாய்ச்சின. அந்தக் காலடி ஓசைகள் தேய்வதற்குள் கதவை அவசரமாகச் சாத்தித் தாழிட்டவள் நிம்மதியான பெருமூச்சு ஒன்று விட்டாள்.

துடிக்கும் நெஞ்சைக் கையால் அழுத்தியபடி அறை விளக்கைப் போட்டு விட்டுக் கணவனை அவசரமாக உலுக்கினாள்.

''இதோ பாருங்க..! திருடன்.! திருடன்..! வாசல்லே திருடனுங்க...!''

''என்னது... என்னது திருடனா..?'' பதறி எழுந்து உட்கார்ந்தார் அவர்.

''ஆமாங்க! எப்பவும் நீங்க விடுகிற குறட்டை ராத்திரி நேரத்திலே நாய்கள் உறுமுகிற பயங்கரமா இருக்குன்னு அலுத்துப்பேனே நான்...?''



''அதுக்கென்ன இப்போ? இன்னிக்கும் அந்த மாதிரி குறட்டை விட்டு உன் தூக்கத்தைக் கெடுத்துட்டேனா என்ன?''

''கெடுக்கிறதாவது? சமயத்திலே நீங்க விட்ட குறட்டைதான் இன்னிக்கு நம்ம இரண்டுபேர் உயிரையும் காப்பாத்தியிருக்காக்கும்!''

கடகடவென்று அவள் சிரிக்க, 'என்ன உளறுகிறாள் அவள்' என்று தலையைத் தடவி விட்டுக்கொண்டார் அவர்! பாவம்! நடந்தது அவருக்கென்ன தெரியும்...?

— ரமணி ரங்கநாதன்

# வலையைக் கிழித்த மீன்

கல்யாணக் கதைகள்-6

## கோமதி ஸ்வாமிநாதன்

ஹெட்மாஸ்டர் சாம்பசிவம் சம்பந்தி வீட்டாரைப் பிச்சமூர்த்தி வீட்டில் தங்கியிருக்க ஏற்பாடு செய்திருந்தார். கிராமத்துப் பிரதான தெருவில் பிச்சமூர்த்தியின் வீடுதான் பெரிது. ஊரிலும் பிச்சமூர்த்திதான் பணக்காரர். பண்ணையார் பிச்சமூர்த்தி என்றால் அந்த வட்டாரத்தில் பிரசித்தம். ஹெட்மாஸ்டர் சாம்பசிவம் குடியிருந்த வீடும் அதே தெருவில்தான் இருந்தது.

சாம்பசிவத்தின் பெண் பார்வதிக்குத்தான் கல்யாணம். சென்ற ஆண்டு பரீட்சைப் பேப்பர்கள் திருத்துவதை மேற்பார்வை பார்க்கச் சென்னைக்குப் போயிருந்தபோது நண்பர் ஒருவர் கல்யாண மார்க்கெட்டில் தயாராக இருக்கும் இரண்டு மூன்று பையன்களின் விலாசத்தைக் கொடுத்தார். சாம்பசிவம் சளைக்காமல் அத்தனை பையன்களையும் பார்த்தார். இந்த முயற்சியில் தேர்ந்தெடுக்கப்பட்டவன்தான் சந்திரசேகரன். எல்லாம் திருப்திகரமாகவே இருந்தது. சம்பிரதாயமாகப் பெண் பார்க்கும் படலம் மாத்திரம் கொஞ்சம்



கிராமத்தைத் தோற்றுவித்தது. பையன் சந்திரசேகரனுக்கு லீவு கிடைக்கவில்லை. இதை அனுசரித்துச் சாம்பசிவம் தம் பெண் பார்வதியைச் சென்னைக்கே அழைத்து வந்து தம் நண்பர் வீட்டிலேயே பெண் பார்க்கும் சம்பிரதாயத்தை வெற்றிகரமாக முடித்தார். முகூர்த்தமும் வைத்தாகி விட்டது. இப்போது சம்பந்திகளும் வந்திறங்கி விட்டார்கள்.

பிச்சமூர்த்தி தம் வீட்டு ரேழியைக் கடந்து வாசலுக்கு வந்தபோது, மாப்பிள்ளையின் தகப்பனார் சீதாராமன், அவர் மனைவி, சீதாராமனின் மைத்துனன் கோபாலன் மூவரும் அங்கே உட்கார்ந்து ஐவுளி விஷயமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

இதுதான் சமயம் என்று பிச்சமூர்த்தி தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார். பொதுப்படையாகக் கிராமத்தைப் பற்றிச் சில வார்த்தைகளை உதிர்த்துவிட்டு, ''சாம்பசிவம் ரொம்ப நேர்மையானவர். எல்லா விஷயங்களையும் சொல்லி யிருப்பாரே!... பாவம்! அந்தப் பெண் பார்வதி..'' என்று சொல்லி நிறுத்தினார்.

''என்ன? அந்தப் பெண்ணுக்கு என்ன?'' என்று ஏக காலத்தில் மூன்று குரல்கள் அவரை நோக்கிப் பாய்ந்தன.

''ஆகா! சாம்பசிவம் சொல்லியிருப்பார் என்ற நம்பிக்கையில் அல்லவா நான் ஆரம்பித்தேன்! ஊஹூம்! ஒன்றுமில்லை. எல்லாம் என் மடத்தனம்! அப்படியே விட்டுடுங்கோ!'' என்று அழுத்தலாகச் சொல்லிவிட்டு மாடியிலிருந்த தம் தனி அறைக்கு விடுவிடென்று போய் விட்டார்.

மற்ற மூவரும் அங்கேயே நின்றுவிடவில்லை. அவர்களும் பிச்சமூர்த்தியைப் பின் தொடர்ந்தார்கள். பிச்சமூர்த்தி எதிர்பார்த்ததும் இதைத்தான். தாம் விரித்த வலையில் அந்த அப்பாவிகள் விழுந்து விட்டார்கள் என்று அவருக்குப் பரம ஆனந்தம்.

அரை மணி நேரம் கழித்து அந்த மூவரும் கீழே இறங்கி வந்தபோது அவர்கள் முகத்தில் உற்சாகம் இல்லை. களை இல்லை. சீதாராமன் உள்ளே போய்த் தம் பிள்ளை சந்திரசேகரனை அழைத்துக் கொண்டு வீட்டின் பின்னாலுள்ள கிணற்றடிக்குப் போனார். தாங்கள் பேசிக் கொள்வதை யாரும் கேட்க முடியாது என்ற நிச்சயத்தில் சீதாராமன் பிள்ளையுடன் பேச ஆரம்பித்தார். சந்திரசேகரன் சில ஆட்சேபணைகளை எழுப்பிப் பார்த்தான். அப்பாவின் வாதம் ஆணித்தரமாக அமைந்தது. அவர் சொல்படித்தான் கேட்கவேண்டும் என்ற நிலை உருவாகியது. பையன் சம்மதித்ததும், சீதாராமன், தயாராக இருந்த வேட்டி சட்டை அடங்கிய கைப் பையை அவனிடம் கொடுத்துக் கொஞ்சம் பணத்தையும் கொடுத்தார். யாரும் கவனிக்காத வகையில் சந்திரசேகரன் கொல்லைக் கதவு வழியாகத் தோப்பில் ஒற்றையடிப் பாதையில் இறங்கி பஸ் போகும் ரஸ்தாவை நோக்கித் தயங்கித் தயங்கி நடந்தான்.





பிச்சமூர்த்திக்குச் சாம்பசிவத்தின் மீது இரண்டு மூன்று விஷயங்களில் ஆழமான மனத்தாங்கல் உண்டு. ஆனால் அவைகளை வெளிக்காட்டாமல் ஒரு சந்தர்ப்பத்தை எதிர் பார்த்துக் காத்திருந்தார். அது இப்போது வலிய வந்தது.

சீதாராமனிடம் பிச்சமூர்த்தி சொன்ன விஷயம் இதுதான்:

''ஸ்வாமி! அந்தப் பெண் பார்வதிக்குக் கொஞ்சம் பேய், பிசாசுக் கோளாறு உண்டு. குற்றாலம், சங்கரன்கோயில் முதலிய இடங்களுக்கு வருடா வருடம் அழைத்துப் போவார். இப்போது குணமாகி யிருந்தாலும் இருக்கலாம். அல்லது கல்யாணமானாலும் குணமாகலாம். இந்த விவரத்தை உங்களிடம் சாம்பசிவம் நேர்மையுடன் சொல்லியிருக்கலாம். ஆனால் இப்போது மறைத்து விட்டார். நீங்கள் இப்போது ஏதாவது கேள்வி கேட்கப் போனால் நான்தான் ஏதோ வத்தி வைத்திருக்கிறேன் என்று மனஸ்தாபப் படுவார். அந்தப் பொல்லாப்பை நான் ஏற்கத் தயாராயில்லை. நான் இந்த ஊரில் எல்லோருக்கும் வேண்டியவன். உங்களுக்கு இஷ்டமில்லை என்றால் இந்த விவரத்தை உங்க பையன்கிட்டே பக்கு

வமாய்ச் சொல்லி அவனை ஒருவருக்கும் தெரியாமல் ஊருக்கு அனுப்பி விடுங்கள். மாலையில் ஜானவாசத்துக்குத் தேடுவார்கள். 'பக்கத்து டவுனுக்கு ஏதோ முக்கிய சாமான் வாங்கப் போனான். வரவில்லையே' என்று நீங்கள் போக்குக்காட்டுங்கள். எட்டுமணிக்கு மேலே கடைசி பஸ், ரயிலெல்லாம் போயிடும். ஜானவாசக் காரிலேயே டவுனுக்குப் போய்த் தேடுவதாக நடியுங்கள். பையன் தட்டுப்பட மாட்டான். நாளை கல்யாணம் நின்றுவிடும். பொறுப்பு பையன் மேல் விழுந்ததாகக் காட்டிக் கொள்ளலாம். 'ஏதோ பிராப்தம் இல்லை'. என்று கூறிவிட்டுக் கிளம்புங்கள். நீங்கள் ஊருக்குப் போய் 'பையன் மனம் சரியில்லை' என்று தகவல் கொடுத்துத் தப்பித்துக் கொள்ளுங்கள்''.

இத்தனையையும் பிச்சமூர்த்தி வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவதுபோல் ஏற்றித் தம் வாசாலகத்தால் அப்பாவி சீதாராமனை மேலும் சிந்திக்க விடாமல் செய்து, வேறு யாரிடமும் விசாரிக்க விடாமல் மடக்கிச் சதி செய்து விட்டார்: சந்திரசேகரன் தந்தை சொற்படி கிளம்பி விட்டான். அப்பாவி சாம்பசிவம், இரவுச் சாப்பாட்டுக்கு ஜாங்கிரிக்குப் பதிலாகப் பால் போளி ஸ்வீட் போடலாமா என்று விசாரித்துக் கொண்டிருந்தார்.

நேரம் ஆக ஆகச் சீதாராமனுக்கு ஒரு விதப் பதற்றம் ஏற்பட்டது. பிச்சமூர்த்தி சொல்லிய விஷயங்களைக் கிராமத்தில் வேறு யாரிடமாவது கேட்டுத் தெரிந்து கொள்ளலாமா என்று ஒரு சபலம். ஆனால் ஒரு பயலும் இந்த உண்மையைச் சாம்பசிவத்தைப் பாதிக்கும் வண்ணம் சொல்லமாட்டான் என்று பிச்சமூர்த்தி ஆஸ்திவாரம் போட்டு வைத்திருந்தாரே!

**மா**லை ஏழு மணி நெருங்கிக் கொண்டிருக்கும் வேளை. ஊருக்கு வெளியே அரை பர்லாங்கு தூரத்திலிருக்கும் சிவன் கோவிலிலிருந்து ஜானவாச ஊர்வலத்துக்கு ஏற்பாடாயிருந்தது.

சாம்பசிவமும் அவர் மகன் சங்கரனும் சம்பந்தி சீதாராமனை அழைக்க வந்து விட்டார்கள். ''கொஞ்சம் டயம் ஆகும்போல் இருக்கே! பையன் டவுனுக்கு அவசரமாக ஏதோ 'நைலான் சாக்ஸ்' வாங்கணும்னு போயிருக்கான். வந்துவிடட்டும்!'' என்று சிரமப்பட்டுப் பாடம் ஒப்புவிப்பது போல் பேசினார் சீதாராமன். அப்போது அவருக்குக் கிடைத்த பதில் எதிர்பாராத அதிர்ச்சியைக் கொடுத்தது.

''அதைத்தான் நாங்களும் சொல்ல வந்தோம். மாப்பிள்ளை திரும்பி வந்து ஒரு மணி நேரமாச்சு! அப்படியே சிவன் கோவிலில் உட்கார்ந்து விட்டார். இதோ அவர் பெட்டிச் சாவி! அதில்தான் ஜானவாச டிரஸ் எல்லாம் இருக்கிறதாம்! எடுத்துக் கொண்டு உங்களை வரச் சொன்னார்'' என்று சொல்லிச் சங்கரன் சீதாராமனிடம் சாவியைக் கொடுத்தான்.

''நீங்கள் முன்னால் போங்கள்'' என்று சொல்லிவிட்டுச் சீதாராமன் பிச்சமூர்த்தியைத் தேடிப் போனார். ஆனால் அவரைக் காணவில்லை. சீதாராமனுக்கு ஒன்றும் புரியவில்லை. சந்துரு ஏன், எப்படித் திரும்பி வந்தான் என்றும் ஊகிக்க முடியவில்லை. 'சரி... கோவிலில் ஜானவாசத்துக்கு முன் சாம்பசிவத்திடம் விஷயத்தை உடைத்து விடவேண்டியதுதான். யார் இந்தப் பிச்சமூர்த்தி? அவருக்கு நாம் ஏன் பயப்பட வேண்டும்?' என்ற தீர்மானத்துடன் அவர் கிளம்பினார்.

நல்லவேளையாக அந்த மோதலுக்குச் சந்திரசேகரன் இடம் வைக்கவில்லை. தந்தையைக் கண்டதும் மண்டபத்திலிருந்து எழுந்து வந்து ஒதுக்குப்புறமான பிராகாரத்தின் பக்கம் வரும்படி சமிக்ஞை செய்தான். அவர் பின்னாலேயே அவன் தாயாரும் அவன் மாமாவும் வந்தார்கள்.

''அப்பா! நல்ல வேளையாக நம் மானம், கௌரவம் எல்லாம் பிழைத்தது. வயிற்றெரிச்சல்காரர் வலையில் விழுந்தும் எப்படியோ தப்பி விட்டோம்! இந்த விஷயம் நம் நாலு பேரைத் தவிர வேறு யாருக்கும் தெரியக் கூடாது'' என்றான் சந்துரு அழுத்தமாக.

''என்னடா சொல்லுகிறாய்? அந்தப் பிச்சமூர்த்தி சொன்னதெல்லாம் பொய்யா?'' என்றார் சீதாராமன். ''ஆமாம்'' என்று கூறி நடந்த கதையை விவரித்தான் சந்துரு.

பஸ் ஸ்டாண்டைச் சந்துரு அடைந்த போது அவனுக்கு ஒரு பேராச்சரியம் காத்திருந்தது. கையில் ஒரு பெட்டியுடன் அங்கே மணமகள் பார்வதியே பஸ் ஏறத் தயாராகக் காத்திருந்தாள்!

ஆச்சரியம் மறைந்த மறு கணம் சந்துருவுக்குக் கோபம் பொங்கியது. 'நாளைக்குக் கல்யாணமாக வேண்டிய பெண் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாள்?' விடுவிடுவென்று அவளை நெருங்கினான் சந்திரசேகரன். அவள் அவனைக் கண்டு பயந்தவளாகத் தெரியவில்லை. ஒளிய முற்படவில்லை. வியப்பை மட்டும் முகத்தில் தேக்கிக்கொண்டு தைரியமாக நின்றாள்.

''எங்கே இப்படி?'' என்று கேட்டான் சந்துரு.

''நானும் அதே கேள்வியைத்தான் கேட்கணும்'' என்றாள் பார்வதி.

''சொல்றேன். எனக்கொண்ணும் தயக்கமில்லை. உன்னைப் பற்றி நல்ல அபிப்பிராயமாகக் காதில் விழவில்லை. அதனால்தான் கிளம்பிட்டேன், இந்தக் கல்யாணம் வேண்டாம் என்று. ஜானவாச ஊர்வலத்துக்கு என்னைத் தேடுவார்கள். நான் இருக்க மாட்டேன்'' என்றான்.

''அடேடே, என்ன ஆச்சரியம் பாருங்கள்! நானும் உங்களைப் பற்றி மோசமான தகவல்களைக் கேள்விப்பட்டதால்தான் இந்தக் கல்யாணமே வேண்டாம்; ஓடிப் போய்விடலாம் என்று இங்கே வந்து பஸ்ஸுக்குக் காத்திருக்கிறேன்'' என்றாள் பார்வதி. ''பெட்டியில் இரண்டு புடவைகளைத் திணித்துக்கொண்டு புறப்பட்டு வந்து விட்டேன் யாருக்கும் தெரியாமல்.''

''என்ன அக்கிரமம்? என்னைப் பற்றி யார் என்ன சொன்னார்கள்?''

''பிச்சமூர்த்தி மாமாதான் சொன்னார். நீங்கள் அவர் வீட்டிலேதானே தங்கியிருக்கிறீர்கள்? உங்களைப் பார்த்ததுமே அவருக்கு அடையாளம் தெரிந்து போய் விட்டதாம்.

அமெரிக்காவில் அரசு அலுவலகங்களுக்கும் பொது விடுமுறை நாட்கள் வருடத்துக்குப் பத்து நாட்கள். அந்த விடுமுறை தினங்கள் சனிக்கிழமை அன்று வந்தால் அலுவலகங்களை வெள்ளி அன்றும், ஞாயிறு அன்று வந்தால் திங்கள் அன்றும் மூடி விடுகிறார்கள்.
-விக்நேசர் - பாலி

சென்னைக்கு அவர் வர நேர்ந்த ஒரு சமயத்தில் அவர் மருமான் உங்களைச் சுட்டிக்காட்டி உங்கள் பிரதாபங்களை அவருக்குச் சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்லி யிருக்கிறானாம். 'ரொம்பக் கேவலமான நடத்தை உள்ளவன், அம்மா. நாளைக்கு முகூர்த்தம் என்னும் போது எனக்கு இதைச் சொல்லவே கஷ்டமாயிருக்கு. ஆனால் உன் எதிர்காலத்தை நினைச்சால் என்னால் சும்மா இருக்க முடியவில்லை' என்றார்.

"இதை அப்பா அம்மாவிடம் சொல்ல அவருக்கும் பிடிக்கவில்லை; எனக்கும் தயக்கம். கல்யாணம் நடந்துதான் ஆக வேண்டும் என்று அப்பா பிடிவாதம் பண்ணுவாரோ என்பதால் நான் அவருக்கும் அம்மாவுக்கும் தெரியாமல் கிளம்பி வந்து விட்டேன்" என்று முடித்தாள் பார்வதி.

சந்திரசேகரனுக்கு வெட்கம் ஒரு பக்கம். பிச்சமூர்த்தி தன்னை நன்றாக ஏமாற்றி விட்டார் என்பதில் கோபம் ஒரு பக்கம். 'இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் என்று யாராவது நம்ப முடியுமா? இவளைப் பெண் பார்த்த போது எத்தனை இனிமையாகப் பாடினாள். இப்போது எத்தனை தெளிவாகத் துணிச்சலாகப் பேசுகிறாள்! இவளைப் பற்றி என்னிடமும், என்னைப் பற்றி இவளிடமும் சொல்லிக் கல்யாணத்தைக் கலைப்பது ஒன்றுதான் பிச்சமூர்த்தியின் நோக்கம். மற்றபடி எங்கள் நலனில் அவருக்கு ஒன்றும் அக்கறை இல்லை. பார்வதியின் அப்பா பேரில் அவருக்கு ஏதாவது காத்திரம் இருக்க வேண்டும்' என்பதெல்லாம் ஸ்பஷ்டமாகப் புரிந்து விட்டது சந்திரசேகரனுக்கு.

அவன் சொன்னான்: "இதோ பார், பார்வதி! நாளைக்கு உன் கழுத்தில் ஏறப் போகும் தாலியின் பேரில் ஆணையாகச் சொல்கிறேன். எனக்கு எந்த விதமான துர்நடத்தையும் கிடையாது. நீ வீட்டுக்குப் போ!"

"ஆகட்டும்; ஆனால் நீங்கள்...?"

"அதுதான் சொன்னேனே, நாளை உன் கழுத்தில் தாலி ஏறப் போகிறது என்று? என்னைத் தவிர வேறு எவன் கட்டுவான்? நான் இதோ நேரே கோயிலுக்குப் போறேன். மாப்பிள்ளையை அங்கிருந்துதானே அழைக்கிறார்கள்?" என்றான் சந்துரு.

பார்வதி ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு ஒரு மகிழ்ச்சிப் புன்னகையை உதிர்த்து விட்டு ஒரே ஓட்டமாக வீட்டுக்குத் திரும்பினாள்.

டவுன் பஸ் அவ்விருவரையும் ஏற்றிக் கொள்ளாமல் ஏமாந்து புறப்பட்டுப் போயிற்று.

சந்துருவுக்குத் தெரியாத விஷயம் இதுதான்: "பாரு! கள்ளத்தனமாக மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டு வரலாம் வாடி!" என்று சொல்லிக் குறும்புக்காரத் தோழி ஒருத்தி அவளை அழைத்துச் சென்றாள். யாருக்கும் தெரியாமல் அவர்கள் பிச்சமூர்த்தி வீட்டுக்குப் பின்புறமிருந்த தோப்பு வழியே வந்தார்கள். கொல்லைப்புறத்தில் அப்பாவும் பிள்ளையும் கிணற்றடியில் ஏதோ ரகசியமாகப் பேசிக் கொள்வதைப் பார்த்தார்கள். மறைந்திருந்து கவனித்ததில் அவர்கள் முகம் கலவரமடைந்திருப்பதையும் கண்டார்கள். ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று உடனே பாருவுக்குத் தோன்றி விட்டது. அதற்கேற்றாற்போல் சந்துரு ஒரு பையுடன் கொல்லைப்புறமாகவே வீட்டை விட்டு வெளியேறிச் செல்வதைப் பார்த்தார்கள்.

பிச்சமூர்த்தி ஏதோ கலகம் பண்ணி விட்டாரோ என்று பாருவுக்குச் சந்தேகம். ஆனால் தீர்மானமாகவும் தெரியவில்லை. பிச்சமூர்த்தியின் இல்லத்தில் மாப்பிள்ளை வீட்டாரை இறக்க வேண்டாம் என்று பார்வதியும் அவள் அம்மாவும் சொன்னதைச் சாம்பசிவம் ஏற்றுக் கொள்ளவில்லை. 'அவருக்கு என்பேரில் ஏதாவது கோபம் இருக்கலாம். ஆனால் கல்யாண சமயத்தில் அதையெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கப்படாது. உதவி வரச்சே ஏற்றுக் கொள்ளணும்' என்று சொல்லி வாயடைத்து விட்டார்.

இப்போது பாருவுக்குத் 'திக்கு திக்'கென்று அடித்துக் கொண்டது. உடனே தோழியிடம் சொல்லிப் பக்கத்திலிருந்த ஒரு வீட்டிலிருந்து ஒரு பெட்டியைக் கொண்டு வரச் சொன்னாள். வெள்ளிச் சாமான்கள் வைக்கத் தாற்காலிகமாகத் தேவைப்படுவதாகச் சொல்லச் சொன்னாள். காலிப் பெட்டியை எடுத்துக் கொண்டு குறுக்கு வழியாக விடுவிடுவென்று நடந்து பஸ் ஸ்டாண்டைச் சந்துரு அடைவதற்குச் சில விநாடிகள் முன்பாகவே அடைந்து விட்டாள். அங்கே சந்துருவிடம் சமத்காரமாகவும் சமயோசிதமாகவும் பேசித் திரும்பி வரவும் செய்து விட்டாள்.

உண்மையில் பிச்சமூர்த்தி மாப்பிள்ளையின் அப்பா சீதாராமனிடம் வத்தி வைத்ததோடு சரி; பாருவிடம் அவர் ஒன்றுமே பேசவில்லை. சந்துருவைப் பற்றி!

ஜானவாசம் ஜாம் ஜாம் என்று நடந்தது. மறுநாள் முகூர்த்தம் வெகு சிறப்பாக நடந்தது. இடையே நடந்த திருஷ்டி பரிகார நிகழ்ச்சி ஒருசிலர் இதயங்களுள் மீண்டும் தலைகாட்டாதபடி புதைந்து விட்டது. மணப்பெண் பார்வதி தன் குறும்புக்காரத் தோழியை விசேஷமாகக் கவனித்துக் கொண்டாள். அவள் விஷமத்தனமாக 'மாப்பிள்ளையை ரகசியமாய்ப் பார்த்து வரலாம் வாடி' என்று சொல்லி வற்புறுத்திக் கொல்லைப்புறமாக அழைத்துப் போகாமல் இருந்திருந்தால் நிகழவிருந்த பெரிய விபரீதத்தைப் பாருவால் தவிர்த்திருக்க முடியுமா?

கல்யாணத்தின்போது பிச்சமூர்த்தியைக் காணோம். ஏதோ அவசர வேலை என்று முதல் நாள் இரவே வண்டியைக் கட்டிக்கொண்டு பக்கத்துக் கிராமத்துக்குப் போனார். மூன்று நாட்கள் கழித்துச் சாவகாசமாக ஊர் திரும்பினார்.

(இதில் வரும் சம்பவங்கள் உண்மை; பெயர்கள் மட்டும் மாற்றப்பட்டுள்ளன)

# வணக்கம் செளக்கியமா?

இவ்வாரம் உரையாடலில் பங்குபெறுபவர்கள்

**சாரா பூகப் பேகம்**

**ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி குப்தா**

## இரு இல்லத்தரசிகளின் சந்திப்பு

**ஆழ்வார்ப்பேட்டையில் உள்ள பாவா ராவுத்தர் சாலையில் திரு எஸ். எச். சையத் பூகப்பின் இல்லம். வேட்டையாடப்பட்ட வனவிலங்குகளின் தோல்கள் சுவரில் மாட்டப்பட்டிருந்தன.**

**மாடங்களில் ஜப்பானியப் பொம்மைகளும், ஓவியங்களும் காணப்பட்டன. இவ்வாறு அழகாகக் காட்சி தந்த வரவேற்பு அறையில் சாரா பூகப் பேகமும் ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி குப்தாவும் சந்தித்தார்கள்.**

ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி குப்தா: சமீபத்தில் நீங்கள் உங்கள் கணவருடன் வட இந்தியா சென்று வந்தீர்களே, ஏதாவது விசேஷம் உண்டா?

சாரா பூகப் பேகம்: நமது பிரதம மந்திரியின் கணவரான—காலஞ்சென்ற பெரோஸ் காந்தியின் பெயரால் ஒரு ஞாபகார்த்தக் கமிட்டி ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அந்தக் கமிட்டியில் என் கணவரும் ஓர் அங்கத்தினர். பெரோஸ் காந்தியின் பெயரால் ரேபரேலியில் ஓர் ஆஸ்பத்திரிக்கு அடிக்கல் நாட்டு விழா நடந்தது. ஜனாதிபதிதான் அடிக்கல் நாட்டினார். அந்த விழாவுக்காக ஒரு மலர் வெளியிட ஏற்பாடும் செய்தார்கள். அந்த மலருக்கு நிறைய விளம்பரங்களையும் என் கணவர் சேகரித்துத் தந்தார். விழாவுக்கு அழைப்பு வந்து போனோம். லட்சுமணபுரியிலிருந்து ஐம்பது மைல் தூரத்தில் இருக்கிறது ரேபரேலி. எங்கே போனாலும் சமீபத்திய போரைப்பற்றித்தான் பேச்சு. முப்படையினரும் எத்தகைய வீர சாகஸங்களைப் புரிந்தார்கள்! விமானப் படையில் உங்கள் கணவர் எப்போது சேர்ந்தார்?

ராஜ குப்: நம் நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன்பே சேர்ந்து விட்டார். கோயமுத்தூரில் ஆரம்பப் பயிற்சி. பிறகு ஜோத்பூர் அம்பாலா முதலிய இடங்களில் மூனு வருஷம் பயிற்சி. ஆனாலும் இதெல்லாம் சமீபத்திய கதைதானே? கப்பல் விடும் துறையில் பரம்பரை பரம்பரையாக உங்கள் கணவரின் குடும்பம் ஈடுபட்டு வந்து கொண்டிருக்கிறது இல்லையா?

சாரா பூ.: என் கணவரின் தாத்தாதான் கப்பல் கம்பெனியை ஆரம்பித்தார். பாவா ராவுத்தரும் ஷேக் முகம்மது ராவுத்தரும் சேர்ந்து, 'கே.பி.வி. ஷேக் முகம்மது ராவுத்தர் கம்பெனி' என ஆரம்பித்தார்கள்.

காந்தியடிகள் உப்பு சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே, பாவா ராவுத்தர் சுதேசி கப்பலைத்தான் ஆதரிப்பேன் என்று சொல்லி விட்டார். பிரிட்டிஷ் கம்பெனிகளின் கப்பல்களுடன் தொடர்பு கொண்டிருந்ததையும் உதறி விட்டார். அதனால் ஏகப்பட்ட நஷ்டம் ஏற்பட்டதாம் அப்போது.....

உங்கள் கணவர் இன்று தாம்பரம்—விமானப்படையின் ஸ்டேஷன் கமாண்டராக இருக்கிறாரே, சீனா, பாகிஸ்தான் படையெடுப்புகளின்போது போர்முனைகளுக்குப் போரிடச் சென்று வந்திருக்கிறாரா?

ராஜ. குப்: 1962ல் சீனப் படையெடுப்பின்போது நேபா போர்முனைக்குப் போரிடச் சென்றார்.

1965ம் வருட பாகிஸ்தானின் படையெடுப்பின்போது புதுதில்லியில் விமானப் படைத் தலைமைக் காரியாலயத்தில் பணி புரிந்தார். விமானப் படை உதவித் தளபதி



எஸ். எச். சையத் பூகப்V





பி. எஸ். குப்தா? >

## பலத்த பாதுகாப்பு

மதிப்பு வாய்ந்த பொருள்களைப் பத்திரப்படுத்துவதற்கென்றே பாங்குகளில் பலமான இரும்புத் தகடுகளைக் கொண்டு அரண் செய்யப்பட்ட பாதுகாப்பு அறைகள் இருக்கின்றன. ஆனால் அமெரிக்காவில் ஒரு மலையே பாதுகாப்பு நிலவறையாக விளங்குகிறது. இதில் சுமார் ஐந்நூறு நிறுவனங்களின் இன்றியமையாத இரகசியப் பத்திரங்களும், அரிய கலைப் பொருள்களும் விலைமதிப்பற்ற நகைகளும் மிகவும் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன.

நியூயார்க் நகரத்துக்கு வடக்கே காட்ஸ்கில்ஸ் என்ற இடத்தில் இரும்பு மலை ஒன்று இருக்கிறது. அதில் இரும்புத் தாதுப் பொருள் அபரிமிதமாக இருந்தது. அதற்காக அந்த மலையை வெட்டிக் குடைந்து இரும்பை எடுத்தார்கள். அதனால் அங்கு மிகப்பெரிய பள்ளம் ஒன்று ஏற்பட்டு விட்டது. அதில் எஃகுப் பாளங்களையும் இரும்புக் கதவுகளையும் பொருத்தி நிலவறையாக்கினார்கள். உலகத்திலேயே மிகப் பெரிய பாதுகாப்பு அறை இதுதானாம்! மழை, வெள்ளம், நெருப்பு போன்ற எத்தனை பெரிய விபத்து, நேர்ந்தாலும் இந்த நிலவறை அசைந்து கொடுக்காது. குண்டுவீச்சுக்கும் இது அஞ்சாது. இந்த ராட்சத நிலவறையில் நூற்றைம்பது அறைகள் இருக்கின்றன. ஆதாரம்: "மாகஸைன் டைஜஸ்ட்" தகவல்: விஜயம்

யின் நேரடி மேற்பார்வையில் யுத்தப் பணிகளில் ஈடுபட்டார்.

இப்போது நடந்து முடிந்த பாகிஸ்தான் போருக்காக, தாம்பரத்திலிருந்தபடி யுத்த முனைக்கு வேண்டிய தளவாடங்களை அனுப்பி வந்தார்.....ஆமாம், கப்பல் கம்பெனி அதிபரின் மனைவியாச்சே, நீங்கள். கப்பலில் உலகத்தையே சுற்றி வந்திருப்பீர்களே!

சாரா ஜூ.: இல்லையே! சிங்கப்பூர் வரை தான் கப்பலில் போய் வந்தேன். ஜப்பான், ஹாங்காங் வரை விமானப் பயணம் போனேன். கப்பல் மூலம் உலகத்தையே சுற்றிவர ஆசைதான். அதற்கு நேரம் வரணும்... ஆமாம், விமானப் படை அலுவலில் எப்போதேனும் பயங்கர ஆபத்தை உங்கள் கணவர் சந்தித்து மீண்டு வந்திருக்கிறாரா?

ராஜ. கு.: விமானப் படையில் சேர்ந்த பிறகு ஆபத்துக்குப் பயந்தால் எப்படி? சொல்லப் போனால் அபாயத்தின் மத்தியில் தான் வாழ்க்கை ஓடுகிறது!

ஜம்மு, காஷ்மீர், நேபா மலைப் பிராந்தியங்களில் பல முறை பறந்து வந்திருக்கிறார். யுத்த முனைகளில் ஏற்படாத உயிராபத்து பாரக்பூரில் ஏற்பட்டு விட்டது. விமானம் தரையில் மோதிவிட்டது. பெரிய விபத்து. மறு பிறவி என்றுதான் சொல்ல வேண்டும்.

சில மாதங்களுக்கு முன்னால் கவர்னர் தம்பதியும் பல கட்சித் தலைவர்களும் ஒன்று சேர்ந்து கப்பலில் மகாபலிபுரம் போய்வர ஏற்பாடு செய்தாரே உங்கள் கணவர்...

சாரா. ஜூ.: சொல்லுங்கள்!

ராஜ. கு.: அப்படி உல்லாசப் பயணம் போய் வரும் யோசனையை யார் சொன்னது?

சாரா. ஜூ.: நான்தான்! கிண்டி ராஜ பவனத்துக்குப் போயிருந்தோம். கவர்னரின் மனைவி கப்பல் பயணம் போனதில்லை எனத் தெரிந்து கொண்டேன்.

சென்னையில் கிளம்பிக் கப்பலில் மகாபலிபுரம் வரை போய்த் திரும்பத் திட்டம் போட்டு, எல்லாத் தலைவர்களையும் அழைத்தோம். கவர்னர் தம்பதி, அமைச்சர்கள், திரு காமராஜ், திரு பி. ராமமூர்த்தி உள்படப் பல தலைவர்கள் கூடினார்கள். தேநீர் விருந்து, விருந்து — எல்லாம் கப்பலிலேயே. கப்பலில் இருந்தபடியே மகாபலிபுரம் கற்கோயில், ரதங்கள், இன்னும் இதரகாட்சிகளைப் பார்த்து விட்டுத் திரும்பினோம். அன்றைய பயணம் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒன்று.

அது சரி, போரினால் பாதிக்கப்பட்ட விமானப் படைவீரர்களின் குடும்பத்தாருக்கு அதிகாரிகளின் மனைவிகள் ஒன்றுசேர்ந்து நற்பணிகள் செய்து வருகிறீர்கள் அல்லவா? உங்களது சங்கம் நன்றாக இயங்குகிறதா?

ராஜ கு.: ஓ! உயிர் துறந்த அல்லது அங்க ஹீனர்களான விமானப் படை வீரர்களின் குடும்பங்களுக்கு எங்கள் சங்கத்தின் மூலமாக உதவுகிறோம். ஆதரவற்ற குடும்பத் தலைவியருக்காகத் தையல் வகுப்பு, டைப்ரைட்டிங், சுருக்கெழுத்து வகுப்பு முதலியன நடத்துகிறோம். நோயால் துன்புறும் ஓய்வு பெற்ற விமானிகளுக்கும் உதவி செய்கிறோம்.

எங்கள் சங்கத்தின் நற்பணிகளுக்கென்று நீங்கள் ஒரு நாடகம் நடத்தித் தந்ததை என்றென்றும் மறக்க முடியாது. எழுபத்தையாயிரம் ரூபாய் அல்லவா வசூல் ஆயிற்று!

சாரா. ஜூ.: ஓ, அதுவா? திரு சிவாஜி கணேசன் நாடகம் நடத்த ஒப்புக்கொண்டு ஒத்துழைப்புத் தந்தார். நல்ல காரியத்துக்கு என்பதால் தாராளமாக வசூலாகிவிட்டது.

ராஜ கு.: உங்களைப் போல் செல்வாக்குள்ளவர்களை அணுகினால்தானே இம்மாதிரி நற்பணிகளுக்கு நிதி வசூல் கிடைக்கிறது!

பொதுநலச் சேவையிலும் ஈடுபடுகிறீர்கள். இதோ உங்கள் வீட்டையும் ரொம்ப அழகாகக் கலையம்சம் விளங்க வைத்திருக்கிறீர்களே, இரண்டுக்கும் நேரம் இருக்கிறதா?

சாரா ஜூ.: கௌரவ மாஜிஸ்டிரேட்டாக எட்டு வருஷங்களாக இருக்கிறேன். பிலிம் சென்சார் போர்டிலும் இருக்கிறேன்... என்ன வெளி உலக வேலைகள் இருந்தாலும் வீட்டு வேலைகளை விடமாட்டேன். குழந்தைகள் படிப்பு, விருந்தினர் வரவேற்பு இதையெல்லாம் கவனிக்கத் தவற மாட்டேன்.

ராஜ கு.: கணவரின் தொழில் வளர்ச்சிக்கு நீங்கள் ஆலோசனை கூறுவதுண்டா?

சாரா. ஜூ.: எப்போதேனும் சொல்வதுண்டு. ஆனால் அதிகம் தலையிட மாட்டேன். உங்கள் மகனை விமானப் படையில் சேர்க்க விரும்புவீர்களா?

ராஜ. கு.: சொன்னால் ஆச்சரியமாக இருக்கும். எங்களுக்கு ஒரே மகன். அவன் கடற்படையில் சேர முடிவு செய்துவிட்டான். அதற்கு நாங்களும் ஆட்சேபிக்கவில்லை!

உங்கள் குழந்தைகளில் ஒருவரை ராணுவ சேவைக்கு அனுப்ப விரும்புவீர்களா?

சாரா. ஜூ.: எங்களுக்கு இரண்டு பெண்கள் ஒரு பிள்ளை. எங்கள் மகனும் கடற்படையில் சேர ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

(இச்சமயத்தில் வேறு சில விருந்தினர் பிரவேசிக்க, ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி குப்தா விடை பெற்றுக் கொண்டு கிளம்பினர்.)

[உரையாடல் தொகுப்பு: ஏ. சுவாமிநாதன்]

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# 100% இயற்கை

பதினெட்டு
அபூர்வ மூலிகைகளைக்
கொண்டு
தயாரிக்கப் படுவது
விக்கோ

# வஜ்ரதந்தி

பிரபல ஆயுர்வேத பற்பசை மற்றும் பல் பொடியான விக்கோ வஜ்ரதந்தி 18 அரிய மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படுகிறது. இம் மூலிகைகளின் தனிப்பட்ட குணங்கள் யாவரும் நன்கு அறிந்ததே. ஆனல் குறிப்பிட்ட அளவுகளில் இவற்றைக் கலக்கும்போது அவற்றின் குணத் திறன் அதிகமாகிறது. விக்கோ வஜ்ரதந்தியின் தற்போதைய செய்முறை பல்லாண்டு ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவருது விக்கோ வஜ்ரதந்தி உபயோகித்தால், பற்சிதைவு, பயோரியா, ஈறுகளிலிருந்து சீழ் மற்றும் இரத்தம் வருதல், மூச்சிலே துர் நாற்றம் முதலியவை தடுக்கப் படுகிறது.

ஒரு முறை உபயோ கித்துப் பாருங்கள்; உண்மை புரியும்.

ஆயுர்வேத
பற்பசை மற்றும்
பற்பொடி.
வாய் ஆரோக்கியத்துக்கு
ஒப்பற்றது.










விக்கோ லாபெரட்டரீஸ்
தாதர், பம்பாய்-14

TML

ஸ்டாக்கிஸ்டுகள்: R. L. கௌடர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை –1

